உ

சிவமயம்

கண்ணுடையம்மன் துணை

# கண்ணுடையம்மன் பள்ளு

(முத்துக்குட்டிப் புலவர் இயற்றியது)



(நள ஆண்டு ஆவணித்திங்கள் 21ஆம் நாள் (6—9—1976)
திங்கட்கிழமை நடைபெற்ற நாட்டரசன் கோட்டை
அருள்மிகு கண்ணுடைய நாயகி அம்மன்
ஆலயக் குடமுழுக்கு விழா நினைவாக வெளியிடப்பட்டது)

★

வெளியிடுவோர் :
உயர்திரு. அரு. கிருஷ்ணன் செட்டியாரவர்கள்
திருமுறைப் புரவலர், சிவதர்ம சீலர்
... பழனியப்ப செட்டியார் அவர்கள்
பாகனேரி.

உ

சிவமயம்

கண்ணுடையம்மன் துணை



# கண்ணுடையம்மன் பள்ளு

(கண்ணுடைய நாயகி அருள்பெற்ற வரகவி

சைவமுத்துநாயகம் என்னும் முத்துக்குட்டிப் புலவரவர்கள்

இயற்றியது)

பதிப்பாசிரியர்

**சொ. சொ. மீ. சுந்தரம், எம். காம்.,**

வணிகவியல் துணைப் பேராசிரியர்,

சௌராட்டிரக் கல்லூரி,

மதுரை.

# பதிப்புரை

"அவனை அறியா அமரரும் இல்லை
அவளன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை
அவளன்றி மூவரால் ஆவதொன் றில்லை
அவளன்றி ஊர்புகும் ஆறறி யேனே"

என்று திருமூலர் பாடியதற்கேற்ப, ஆன்மாக்களை இறைவன் திருவருளோடு இரண்டறக் கலக்கவைக்கும் அங்கயற்கண்ணியாகிய மீனாட்சியம்மை எழுந்தருளி இருக்கும் ஆலயங்கள் பலவாகும். அவற்றுள் நாட்டரசன் கோட்டையும் ஒன்றாகும். கண்ணுடைய நாயகி என்ற பெயரில் அம்மையின் அருளாட்சி நடக்கும் இவ்விடத்தையே தம் இறுதி நாளைக் கழிக்கத் தேர்ந்தெடுக்கிறார் கவிச் சக்கரவர்த்தி கம்பநாட்டாழ்வார். கண்ணாத்தாள் என்றும் கண்ணப்பன் என்றும் தம்மக்களுக்குப் பெயரிட்டு வாழும் தனவணிகர் குலம் தழைக்கக் கண்ணுடையாள் அருள்பொழிகிறாள். வடக்குவாய்ச் செல்வியான இவள் சிறப்பை வியந்து

கோதண்ட மாமலர் வாளியடி — அண்ட
கூடம் இவள்பத தூளியடி
மூதண்ட பத்திர காளியடி — அம்மன்
மூவர்க்கும் தான்முத லாளியடி

என்று பாடினார் முத்துக்குட்டிப்புலவர். இவர் இயற்றிய கண்ணுடையம்மன் பள்ளு, தமிழ்ச்சிற்றிலக்கிய வரிசையில் தகவுடன் வைத்து எண்ணத்தக்க நூலாகும். பக்திச்சிறப்பும் பாட்டுச்சிறப்பும் அழகுச் சிறப்பும் அமைப்புச் சிறப்பும் நிறைந்த இந்நூல், பல்லாண்டுகளுக்கு முன் இலங்கை யாழ்ப்பாணத்தில் பதிப்பிக்கப்பட்டது. அதற்குப் பிறகு அன்னையின் அருள் ஆலயக் குடமுழுக்கு நாளாகிய இந் நன்னாளில் வெளியிடப்பெறுகிறது.

இந்த வெளியீட்டிற்குக் காரணமாய் இருந்தவர்கள் இரு தன வணிகப் பெருமக்கள். ஒருவர் பாகனேரி புல்வாயம்மன் ஆலயத்திற்குத் திருத்தேர் செய்து வைக்கும் திருப்பணியில் முன்னின்று உழைத்த உயர்திரு. குப. அரு. கிருஷ்ணன் செட்டியார் அவர்கள்.

இன்னொருவர் பன்னிரு திருமுறையைப் பரப்புவதே வாழ்வின் குறிக்கோள் எனத் தொண்டாற்றி, கண்ணுடையம்மன் திருப்பெயர் விளங்கத் தன் மைந்தருக்குக் கண்ணப்பன் என்று பெயரிட்ட திருமுறைப்புரவலர், சிவதர்மசீலர் உயர்திரு இராம. முத்துப் பழனியப்ப செட்டியாரவர்கள். அவர்களுடைய குடும்பமே தமிழ்காக்கும் சைவக் குடும்பம் மனைவி மகன் எல்லோரையும் திருமுறைப் பணியில் ஈடுபடச் செய்த முத்துப் பழனியப்ப செட்டியாரவர்கள், என்னையும் இப்பணியில் ஈடுபடுத்தினார்கள். திருவண்ணாமலையிலும் திருவிராமேச்சுரத்திலும் குடமுழுக்குத் திருநாளில் திருமுறைப் பாராயணத்திற்கு ஏற்பாடு செய்த அவர்கள் நெஞ்சம் அன்னையின் குடமுழுக்கு விழாவில் அவள்புகழ்பாடும் 'கண்ணுடையம்மன் பள்ளு' நூலை வெளியிட நினைத்தது. அந்தப்பணி 'பேற்றைத் தவஞ் சற்றும் இல்லாத' எனக்கும் கிடைத்தது

கண்ணுடையாள் கருணையினால் இந்நூல் வெளிவருகிறது. இதற்குக்காரணமாய் இருந்த திரு. கிருஷ்ணன் செட்டியாரவர்கள், திரு. முத்துப் பழனியப்ப செட்டியாரவர்கள் இருவருக்கும் அன்னையின் அருள் நீண்ட வாழ்வையும் நிறைசெல்வத்தையும் தரும் என்பதில் ஐயமில்லை.

இந்நூலை மிகவிரைவில் உயர்ந்த முறையில் அச்சிட்ட மதுரை கணேச அச்சகத்தினருக்கு என் நன்றிகள் உரித்தாகின்றன.

அஞ்செழுத்தின் வடிவாயிலங்கும் அன்னையின் திருவிரல் மிஞ்சியாகவாவது விளங்கட்டும் என்று இந்நூலை அவள் அடிகளில் சமர்ப்பிக்கிறேன்.

சௌராட்டிரக் கல்லூரி,
மதுரை.
5—9—1976.

பணிவுள்ள,
**சொ. சொ. மீ. சுந்தரம்**

# கண்ணுடையம்மன் பள்ளு

சீர்வளரும் கண்ணுடையாள் செந்தமிழ்சேர் பள்ளிதனைப்
பார்வளர வைத்துப் பதிப்பிக்கும்—பேர்வளரச்
செந்தமிழைத் தந்து சிலம்பணியில் வீற்றிருக்கும்
ஐந்துகரத் தானை அது.

முன்னுரை

நேரத்திற்கொரு பண்ணும் நிலத்திற்கோர் இசையுமாக வாழ்ந்த பழந்தமிழகத்தில் பேரிலக்கியங்களும் சிற்றிலக்கியங்களும் பெருகி வளர்ந்தன. குறிஞ்சி நிலத்தில் குறவஞ்சி வளர்ந்தது போல, மருத நிலத்தில் பள்ளு என்ற சிற்றிலக்கியம் பெருகியது. "நெல்லு வகையை எண்ணினாலும் பள்ளு வகையை எண்ண முடியாது" என்று திருநெல்வேலி மாவட்டத்துப் பழமொழி கூறுவது போல முக்கூடற் பள்ளு, செங்கோட்டுப் பள்ளு, திருவாரூர்ப் பள்ளு, திருமலைப் பள்ளு, குருகூர்ப் பள்ளு, சிவசயிலப் பள்ளு, வடகரைப் பள்ளு, சீர்காழிப் பள்ளு, தில்லைப் பள்ளு, கதிரைமலைப் பள்ளு, பருளை விநாயகர் பள்ளு, தண்டிகைக் கனகராயன் பள்ளு, சேற்றூர்ப் பள்ளு, திருவிடை மருதூர்ப் பள்ளு, மாந்தைப் பள்ளு, கூடற் பள்ளு, தஞ்சைப் பள்ளு, தென்காசிப் பள்ளு, கொடுமளூர்ப் பள்ளு, புதுவைப் பள்ளு, சண்பகராமன் பள்ளு, வையாபுரிப் பள்ளு, திருச்செந்தில் பள்ளு எனப் பலவகைப் பள்ளுகள் தமிழ்நாட்டில் எழுந்தன. இவைகளில் சிறப்பும் பொருட்சிறப்பும் பொருந்தியது முத்துக்குட்டிப் புலவர் என்பவர் இயற்றிய கண்ணுடையம்மன் பள்ளு என்னும் சிற்றிலக்கிய மாகும்.

தமிழில் சிற்றிலக்கியங்களைத் தொண்ணூற்றுறு வகையாகப் பிரிப்பதுண்டு. இவற்றுள் பள்ளும் ஒன்றாகும். பாட்டுடைத்தலைவனின் ஊரில் நிகழும் சில நிகழ்ச்சிகளை நாடகமாக்கிக் காட்டுவது இந் நூலின் இயல்பு. இதன் மூலம், பண்டைய அரசர்கள், குறுநில மன்னர்கள், வள்ளல்கள் இவர்கள் வாழ்க்கை நிகழ்ச்சிகளும் விளங்கு கின்றன

குன்றில் வாழும் குறத்தியர் சிறப்பைக் கூறும் பாட்டைக் குறவஞ்சி என்கிறோம். இது போலச் சேரியில் வாழும் பள்ளியர் பாட்டு. 'பள்ளு' என்றும் 'பள்ளு நாடகம்' என்றும் வழங்கப் பெறும்.

இதனை உழத்திப் பாட்டு என்பதும் உண்டு. முன் காலத்தில் தமிழ் நாட்டின் ஆலயங்களில் திருவிழாக்களின் முடிவில் குறவஞ்சி நாடகமும் பள்ளு நாடகமும் நாட்டியமாக நடித்துக் காட்டப்பட்டன.

### இலக்கணம்

பள்ளு நாடகம் சிந்தும் கலிப்பாவும் விரவி வரச் சேரி மொழி களாகக் குறித்த பொருள் எளிதில் விளங்குமாறு பாடப்பட்ட நூல் நூலுக்குரிய எட்டுவகை வனப்புகளில், சேரிமொழிகளால் பாடப் பெறுவதும் ஒன்ருகும். இதனை

> சேரி மொழியால் செவ்விதில் கிளந்து
> ஓதல் வேண்டாது குறித்தது தோன்றில்
> புலனென மொழிப புலன் உணர்ந் தோரே

எனத் தொல்காப்பியம் செய்யுளியல் கூறும். இதை விளக்கிய பேராசிரியர், "சேரி மொழியென்பது, பாடி மாற்றங்கள் அவற்ருனே செவ்விதாகக் கூறி ஆராய்ந்து காணுமைப் பொருட்டொடரானே தொடுத்துச் செய்வது புலன் என்று சொல்லுவர் புலன் உணர்ந்தோர் என்றவாறு. அவை விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வன என்பது கண்டு கொள்க" எனக் குறிக்கிருர்

### "கண்ணுடையம்மன் பள்ளு"

இது தென்பாண்டி நாட்டில் சிவகங்கைக்கு அருகிலுள்ள பனசை என்னும் நாட்டரசன் கோட்டையில் அருள்வடிவாய் எழுந் தருளியிருக்கும் கண்ணுடைய நாயகி மேல் பாடப்பட்ட நூலாகும். இதைப் பாடியவர் அம்பிகையின் அருள்பெற்ற வரகவி முத்துக்குட்டிப் புலவராவார். இவரைச் சைவமுத்துநாயகம் என அழைப்பதும் உண்டு. இருபதாம் நூற்ருண்டின் தொடக்கத்தில் பாடப்பட்ட இந் நூல், கண்ணுடையம்மன் சிறப்பையும், கண்ணுடையம்மன் ஆலயத் திற்குரிய நிலத்தை உழுதுவரும் பள்ளன் வாழ்க்கையையும் சிறப்பாக விவரிக்கிறது.

### கண்ணுடையம்மன் பெருமை

ஆணவத்தின் வடிவமான சண்டாசுரனை அழிக்க, அருள் வடிவ மான பராசக்தி அவதாரம் செய்து, தவம் செய்து, அசுரனை அழித் தாள். தேவர்கள் காணத்தக்க வகையில் அவர்களுக்கு ஞானக்

கண்ணைத் தந்து, தன் திருவுருவைக் காட்டினுள். "காண்பார்யார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே" என்ற அப்பர் திருவாக்கிற் கிணங்க, தன்னைக் காணக் கண்தந்து, காட்டினுள். இப்படி அடியார்க்கருள் செய்யும் ஞானமாகிய அருட்கண்ணுேக்கை உடையவள் ஆதலால் கண்ணுடைய நாயகி என்ற பெயர் பெற்ருள் இந்தப் பெயரில் அன்னை அமர்ந்த இடமே நாட்டரசன் கோட்டையாகும். "பூணுமெழிற் காளி எதிர் பொருந்தலர் மெய் கண்ணில் காணவர முற்றமையில் கண்ணுடையள்" ஆனுள் எனக் காளையார் கோயில் புராணம் கூறும் காணமுடியாத ஆணவமாகிய சண்டாசுரனைக் கண்டு அழிக்கத்தக்க கண்பெற்றமையால் அன்னை கண்ணுடைய நாயகி யானுள் என்பது இதன் பொருள். "தேராமன்னு! செப்புவ துடையேன்" என்று தொடங்கி மன்னன் அவையில் வழக்குரைத்து, மதுரையில் சிலம்பெறிந்து தீப்பொறி கிளப்பிய கண்ணகியே கண்ணுடைய நாயகியானுள் என்பாரும் உண்டு.

அம்மையின் வரலாற்றில் கருத்து வேறுபாடுகள் இருப்பினும் அம்மையின் அருளில் கருத்து வேறுபாடுகள் யார்க்கும் இல்லை கண்ணுடைய நாயகியின் ஆலயத்தில் ஒரு மண்டலம் விரதமிருந்தால் கண்ணில் வரும் நோய்கள் மாறும். பார்வையற்ருர்க்கும் பார்வை வரும். ஞானக்கண்ணையே தரவல்ல நாயகிக்கு ஊனக் கண் கொடுப்பது அரிய செயலில்லையன்ரே!

நேத்திரங் கெட்டவொரு நீள்வணிகர் ஓயாது
தோத்திரஞ் செய்யக்கண் தோற்றுவித்தாள் — க்ஷேத்திரத்தில்
மண்டலந் தங்குனர்க்கு மாபிணியைப் போக்கிவைப்பாள்
தண்டையணிக் கண்ணுடையாள் தான்.

என்ற பாடல் கண்ணுடையாள் கருணையை விளக்கும் சிவகங்கை மன்னர்களும், சிவம் வளர்க்கும் நகரத்தார்களும் அம்மையின் அருளை அருட்பணியால் பெற்றவர்கள்,

நாட்டர சன்கோட்டை — தமிழ்
நாடு பெருங்கோட்டை
பாட்டர சன்கம்பன் — அன்று
பார்த்த தனிக்கோட்டை
போட்ட தமிழ்க்கோட்டை — மீருப்
புலவர் திருக்கோட்டை

பாட்டில் உயிர்த்தெழுந்த — தமிழ்ப்
பத்தினி யாள்கோட்டை.

என்று போற்றப் பெரும் நாட்டரசன் கோட்டையில் கோயில் கொண்ட இந்நாயகிக்குப் பலிப்பொங்கல் இட்ட காலமும் உண்டு பாற் பொங்க லிட்ட காலமும் உண்டு. ஆசிரியர் முத்துக்குட்டிப் புலவர் "பலிப் பொங்கல் கருணையில்லை பால் பொங்கல் நிலைப்பதில்லை எனவே நாம் பாப் பொங்கல் இடுவோம்" என உறுதிகொண்டு இந்தக் கண்ணுடையம்மன் பள்ளு நூலை இயற்றியருளினர்

அவித்த நெல் முளைக்காது என்பது நாம் அறிந்த உண்மை. ஆனல் கண்ணுடைய நாயகி ஆலயத்தில் நடைபெறும் களி யாட்டத்தில் அவித்த நெல் முளைப்பதைக் காணும் பொழுது, அன்னையின் அருள் நம்மை மெய்ம்மறக்கச் செய்கிறது. இதைப் பள்ளு நூலும் விரித்துப் பேசுகிறது. இந்த நூலுக் முகவுரை தந்த "முத்துக்கிருஷ்ண உபாத்தியாயர்" என்பவர் இதை வியந்து

கண்ணுடைய தாய்மகிமை காசினியோர் இவ்வளவென்(று)
எண்ணுடைய தாய்மதிக்க ஏலாது — மண்ணுடைய
புல்முளைக்க எத்தனைநாள் போகுமுட னேயவித்த
நெல்முளைத்தல் சாட்சி நிசம்.

என்று பாடினர்

**நூலமைப்பு**

கண்ணுடையாள் ஆலயத்தின் முன் பள்ளனும் பள்ளிபரும் வருகிறார்கள். பள்ளன் பெயர் கண்ணக் குடும்பன் முக்கூடல் பள்ளு என்னும் நூலில் பாட்டுடைத் தலைவனுகிய திருமாலின் பெயரோடு பள்ளன் வடிவழகக் குடும்பனுகத் தோன்றுகிறான் அது போலக் கண்ணுடையம்மன் பள்ளில், பள்ளன் அன்னையின் பெயரோடு சேர்ந்து கண்ணக் குடும்பனுகக் காட்சியளிக்கும் நயம் கருதத் தக்கது, பள்ளிகளில் மூத்தவள் பெயர் சென்னெற்குடிப்பள்ளி இளையவள் பெயர் இலுப்பைக்குடிப் பள்ளி, இருவரும் பள்ளனுக்கு மனைவியர். இவர்கள் மூவரும் நாட்டு வளம், நகர வளம், தீர்த்தச் சிறப்பு, காரணக்காரர் சிறப்பு, ஊர்வளப்பம் இவற்றைப் பாடுகிறார்கள். கண்ணுடையாள் சிறப்பையும் அவளுக்குப் பணி செய்யும் அடியார் சிறப்பையும் பாடுவாய் குயிலே என்று குயிலை வேண்டுகிறார்கள் கண்ணுடையாளுக்குத் திருக்குளம் வெட்டுகிறார்கள். கிராம தேவதைகளை வழிபட்டு எருதுகட்டு நடத்துகிறார்கள். பிறகு களியாட்ட வீட்டை

அலங்கரித்து முளைக்கொட்டி விளையாடுகிறார்கள். அப்பொழுது நாயகி சிறப்பை நலமுறக் கூறி முளைப்பாட்டும் கும்மிப்பாட்டும் பாடுகிறார்கள். அம்மையின் கருணையால்

முன்னிக் கடலைச் சுருக்கி எழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை ஆளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேல்
பொன்னம் சிலம்பில் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நம்தம்மை ஆளுடையாள்
தன்னில் பிரிவிலா எம்கோமான் அன்பர்க்கு
முன்னி அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோர் எம்பாவாய்

என்று மணிவாசகர் பாடியபடி மழை பெய்து, வெள்ளம் வருகிறது. பண்ணை மணியக்காரர் வருகிறார். நெல் வகை, உழுவதற்கான மாட்டுவகை. கிடைபோடத்தக்க ஆடுகளைப் பற்றிய விவரங்கள் இவற்றைப் பள்ளன் சொல்கிறான். திருப்பதி ஐயர் என்னும் பெயருள்ள பஞ்சாங்க ஐயர் வந்து ஏர்பிடிக்க நாள்பார்க்கிறார். அந்த நாளில் ஏர்பிடித்து உழுது, முளைவர, நாற்று நடுகிறார்கள். பிறகு நெல் வளரக் கதிர் அறுக்கிறார்கள், அறுத்த கதிரைப் பலருக்கும் பங்கிடுகிறார்கள். மழை பெய்து நெல் விளைந்து நாட்டு வளம் பெருகியதும், பள்ளன் வீட்டில் மூத்தவள் இளையவள் சண்டை தொடங்குகிறது. பண்ணையாரிடம் வந்து பள்ளனைப்பற்றி மூத்தபள்ளி குறை சொல்கிறாள், அப்பொழுது பள்ளனும் வருகிறான். பள்ளனுக்குப் புத்தி சொல்லுங்கள் என்று மூத்த பள்ளி' பண்ணையாரை வேண்டுகிறாள் அந்தச் சமயத்தில் இளையபள்ளி வர, இருபள்ளியரும் ஒருவரையொருவர் ஏசுகிறார்கள். இறுதியில் கண்ணுடையாள் புகழ்பாடி இருவரும் மனமொத்துத் "தாயும் பிள்ளையும் போல" இருக்கலாம் என்ற முடிவுக்கு வருகிறார்கள்.

கலிப்பா, சிந்து, சந்தவிருத்தம் முதலிய யாப்புகளில் இந்த நிகழ்ச்சிகளைப் பாடி 125 பாடல்களில் நூலை நிறைவு செய்கிறார் ஆசிரியர். கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாக விளங்கும் நாட்டரசன் கோட்டைக் கண்ணுடைய நாயகியின் சிறப்பைக் கூறும் இந்நூலைப் படித்துப் பலனடைந்தவர் பலர் அவர்கள் கண்ணுடையாள் பெயர் விளங்கத் தம் மக்களுக்குக் கண்ணாத்தாள் என்றும் கண்ணப்பன் என்றும் பெயரிட்டு அழைத்து வருகிறார்கள் இத்தகைய

சிறப்புடைய பராசக்தியின் இந்நூலைப் படிப்பவரும் கேட்பவரும் பிறவிப் பிணி நீங்கிப் பேரின்ப வெள்ளச் செறிவுக்குள் சென்று சிறப் புறுவார்களாக!

# கண்ணுடையம்மன் பள்ளு

## காப்பு

### விநாயகர் வணக்கம்

விருத்தம்

நீடுபெறுஞ் செல்வம் நிறையும் கலைவேள்வி
நாடுபுகழ் கண்ணுடைய நாச்சியார் பள்ளிசைக்கே
ஏடும்எழுத் தாணியும்முன் ஏந்துமக மேருவுந்தன்
கோடுமெனக் கொண்டமதக் குஞ்சரம்தாள் காப்பாமே.

## பாயிரம்

திருமாதுஇசை நாமகள் புவிமகள் செயமாதுஇவ ளாமென வரிசைசெய்
சிவகாரணி நாரணி திரிபுரை செகன்மாதா
இருமாநிலம் மேலுயர் பனசைநன் னகர்மேவிய தேவிகண் ணுடையவள்
எனையாள்பவள் மீதினில் இனியபள் ளிசைகூற
அருமாமறை தேடிய பொருளுயர் அருள்சேர்மக மாயிசந் நிதிதனில்
அபிஷேகவி நாயகர் திருவரசு அடிவாழ்வாய்
வருமாதிவி நாயகர் வடதிசை வளர்தேசிவி நாயகர் இவருடன்
வருமூவர் விநாயகர் துணையென மகிழ்வேனே. (1)

நாலாகிய சுருதிக்கண் ணுடையவள் ஞானோதய பரிதிக்கண் ணுடையவள்
நாவாணர்சொல் நளினக்கண் ணுடையவள் நலநீர்வாழ்
சேலால்உயர் கருணைக்கண் ணுடையவள்
சீதேவிஎன் னருமைக்கண் ணுடையவள்
சீர்மேவிய பனசைப்பள் ளெனுமுயர் இசைபாட
சூலாயுத சிவசக்தி யுடனிறை சோமீசர்மெய் யருளைக்கை தொழுதொரு
சூர்மாபுரம் நெரிபட் டிடவிடு சுடர்வேலோன்
மேலாம்மக பதிபுத்ரி குறமகள் மேனாள்அரி கரபுத்ரன் வடுகையன்
வீரேஸ்வரன் இவர்கள்பொற் பதமலர் மறவேனே. (2)

தடமும்மத மாதங்க மாமுகர் தனிவெம்முனை வேல்கொண்ட சேவகர்
தமதன்னையர் மூதண்ட கோடிகள் தருதாயார்
இடமென்மனம் ஈதென்று வாழுமென் இருகண்மணி யாய்வந்த பூரணி
இவள்கண்ணுடை யாளன்பு நீடுபள் ளிசைகூற
மடல்வண்ணமும் வாசஞ்செய் தாமரை மலர்மின்னலர்
மேல்மங்கை நாயகர்
மணிவண்ணர்நம் மால்வெங்க டேசுரர் மறைவேதா
உடன்இன்னிசை நாமங்கை மாமதி யொடுபன்னிரு வோரென்ற சூரியர்
உயர்விண்ணவர் சீர்தந்தென் னுவினில் உறைவாரே. (3)

வியன்அன்புடை யோருக்கு மனதினில் மிகநம்பின
பேருக்கும் இனியசொல்
விளையுந்தமிழ் வாணர்க்கும் அனுதினம் அருள்கூர்ந்து
பயனுந்தரு தானக்கண் ணுடையவள் பணிகின்றமெய்ஞ்
ஞானக்கண் ணுடையவள்
பதபங்கய சீலத்தை இனியபள் ளிசைபாட
சுயமென்றடி யேனுக்கும் வரமுயர் துதிதந்த பராசக்தி பதமலர்
துணையென்றவள் பேரைச்சொல் லியஅரு மையினாலே
நயமென்றெனது ஏழைச்சொல் வழுவினும் நடுநுண்பொருள்
ஆணிச்சொல் இதுமிக
நலதென்றுரை பூரிப்பர் தமிழ்தெரி நல்லோரே. (4)

**கலிப்பா**

அன்னபரி பூரணிநல் லன்புடையாள் தென்பனசை
நன்னகர்வாழ் கண்ணுடைய நாச்சியார் பண்ணைதனில்
வன்னமயி லும்குயிலும் வந்தனைசேர் பள்ளியர்கள்
சொன்னமய மாகவந்த சோபனமும் சொல்வேனே. (5)

### மூத்தபள்ளி வருகை

சுரும்படர்பூங் குழலும்மன் மதவேள் பொரும்பகழி புதுமுல்லைச் சரமும்
துடியிடையும், இடையில்பட் டுடையும், — பிடி நடையொயிலும்
கரும்புருவச் சிலைகளுநெ ருங்கிக் குரும்பைகள்சாய்ந் திருந்ததுபோல்
எழிலே
கனிந்திடுமூர்க் கங்கொடுமெள்ளக் — குனிந் திடுதனமும்

அரும்புனகைப் பவளச்செவ் வாயும் இரும்பையும்வட் டுருக்கையும்உ
ருக்கும்
அஞ்சனக்கண் பார்வையுங் கழுத்தில் — மஞ் சணப்பூச்சும்
திரும்புமயில் சாயலும்கு யில்கள் விரும்புகனி வார்த்தையும் இசையும்
செந்நெற்குடி மூத்தபள்ளி வந்து — தோன்றினளே (6)

## இளையபள்ளி வருகை

மாந்தளிர்போல் மேனிபொன் னெளிரக் கூந்தல்மழைக் கார்நிறம்
காட்ட
மருக்கொழுந்தும் வேருமல் லிகையும் — சொருக்கினில் இலங்க
காந்தள்மலர்க் கரவளைகு லுங்கப் பூந்துகிலின் இடைதுவண் டசையக்
காலிலிடு பாடகச் சிலம்பும் — ஒலிட நடந்து
மோந்திடுபன் னீர்மணம் வீசச் சாந்துச வாதுகம கமென
மொழிக்குமொழி தேன்வரக் குழலின் — மேல்விழிக்கபல்தாவ
ஏந்துகொம்புக் கிணையெனவ ளர்ந்து இறு மாந்ததனக் குடங்களும்
குலுங்க
இலுப்பைக்குடி இளையபள்ளி வந்து — தோன்றினளே (7)

## பள்ளியர் குடி வரலாறு கூறுதல்

உத்தமிம னேன்மணிகண் உள்ளமக மாயி பண்ணைக்
கொத்தடிமைப் பள்ளன் குடும்புசெலுத் தும்திறத்தில்
பத்ததிக மானதொழில் பள்ளியர்கள் தங்கள் குடி
வர்த்தனையும் வந்த வரலாறும் சொல்வேனே (8)

## மூத்தபள்ளி கூற்று

கனகவில்லி தன்வில்லைச் சனகன்ம கள்பொருட்டால்
காரானை போல்வளைத்த ஸ்ரீராமனுர்
புனல்சூழ்இ லங்கைசேனை முனைவாளால் அமர்வென்ற
புகழைத்த மிழ்க்கடலாய் மகிழச்செய்தோன்
மனதுபூ ரிக்கும் கம்பர் பனசைமா நகர்தேடி
வந்தநாள் முதல்பண்ணைச் சொந்தமுள்ளோன்
தினமுங்கண் ணுடையவள் தனதடி யானுக்கேற்ற
செந்நெற்குடி மூத்தபள்ளி நானேயாண்டே. (9)

## இளையபள்ளி கூற்று

மலர்மாது கண்ணுடையாள் உலகீன்ற வட்குமுத்து
வடுகநா தேந்த்ரதுரை நெடுநாளைக்கும்
குலவும்இ லுப்பைக்குடி நிலைமைசாம் ராச்யமாகக்
கொடுத்தநா ளில்குடும்பன் தொடுத்தபடி
கலனெக்கு றுணிவார்த்தை பலநாளில் சேர்க்கச்சொல்லிக்
காணிக்குக் கொண்டான் என்னை ஆணிப்பொன்போல்
இலகுமக மாயி பேரில் உழவுபண்ணைப் பள்ளனுக்(கு)
இலுப்பைக் குடியிளையாள் நானேயாண்டே (10)

## பள்ளன் வருகை

வண்டுகந்த செந்தா மரையில்வந்த மாமயில்சொற்
கண்டுவந்த சொல்லுடையாள் கண்ணுடையாள் கோயிலுக்குப்
பண்டுவந்த ஊர்முழுதும் பண்ணைவந்த நாள்முதலாய்க்
கொண்டுவந்த கண்ணக் குடும்பன்வந்து தோன்றினனே. (11)

தொண்ணூறு பொன்னேத்தியாய் வெண்ணீறு அணிந்தவாய்ப்பும்
தோளில்மண் வெட்டிக்கொட்டும் துள்ளு மீசையும்
உண்ணுவுண் ணமிகப்பேய்த் தண்ணீர் வெறி மயக்கம்
உருமால்கட் டுங்கொண்டையும் இறுமாப்புடன்
நண்ணும் இடையில்நீல வன்னக்க ருங்கச்சையும்
நையாண்டி வார்த்தையும்கொண்டு ஒய்யாரமாய்க்
கண்ணுடைய நாச்சியார் பண்ணையுள் ளவடிமைக்
கண்ணக் குடும்பன்வந்து தோன்றினனே. (12)

## பள்ளன் கூற்று

விந்தைசேர் இரணியன் மைந்தன் பிரகலாதன்
மிக்கபொன் மாவலியும் திக்காளும் நாள்
வந்தவே ளாளருடன் முந்துநாடு நகரம்
வடக்குவாய்ச் செல்லியற்கு நடக்கவென்று
சொந்தமான கிராமம் தந்துபெரு நான்கெல்கை
சூலக்கல்லும் நாட்டிய காலத்திலே
அந்தநாள் முதலாய் வந்து எந்த நாளைக்கும் பண்ணை
அடிமைக்கண் ணக்குடும்பன் நானேயாண்டே. (13)

## பள்ளனின் பக்தி

நன்னிலம் புகழ்தேவி சந்நிதி கும்பிடாரை
நாட்டில்வண் டிக்கடாவாய்ப் பூட்டுமென்பேன்
இன்னமிவள் துணையென்று எண்ணிடா தவர்நெஞ்சை
இருத்திமண் வெட்டிக்கொட்டால் திருத்திடுவேன்.
அன்னைகளி யாட்டத்தைச் சன்னைசொன் னவர்நாவை
அடுத்த பயிர்களைப் போல் எடுத்தெறிவேன்.
சொன்னமயில் கண்ணுத்தாள் பொன்னடி வணங்காரைச்
சோறுதிண்ணி மாடென்று மாறுவேன் ஆண்டே. (14)

## பள்ளியர் நாட்டுவளம் கூறுதல்

பொன்பெருகு செல்வம் புனல்பெருகு வாவியும் சூழ்
தென்பனசைக் கண்ணுடைய தேவிதிருத் தாள்போற்றி
நன்பவளம் தேன்ஒழுக நாட்டுவளம் பள்ளியர்சொல்
இன்பவளம் கேட்கமனத்து இச்சைவளர்ந் தேறியதே. (15)

பெய்யும் மாரிநன் னீருள்ள நாடு
பெருக்க மாவயல் ஏருள்ள நாடு
பொய்யா மல்விளை சீருள்ள நாடு
புண்ணி யப்பொருள் வேருள்ள நாடு
உய்யு மாதவத் தோர்உள்ள நாடு
கண்ணுள்ள நாச்சியார் பேருள்ள நாடு
வைகா சித்திருத் தேருள்ள நாடு
வடகலை வேள்வி நாடெங்கள் நாடே. (16)

வெய்ய சாபம் கடம்ப வனத்தில்
விடும்ப டிக்கொரு வெள்ளானை பூசை
செய்ய வேதிருக் கானைவனந் தேடிச்
செல்லும் மார்க்கத்தில் தீர்த்தமும் உண்டாய்த்
துய்ய தோர்சிவ லிங்கம் கரிகால
சோழன் கண்டிவர் சோழீச ரென்று
வையை நாட்டில் பிரதிஷ்டை செய்த
வடகலை வேள்வி நாடெங்கள் நாடே. (17)

எந்த நாட்டிலும் ஏற்றமின் னுடென்(று)
ஏழூர்ப் பற்றுக்கும் இலக்கா யிருந்தோன்
அந்த நாட்டர சன்தன் அரசுநா(டு)
ஆளும் நாளில் அதிகாரங் கொண்டு
சொந்த நாட்டினில் கோயில் குளங்குடி
சூழும் கோட்டைதன் பேரிட்டுண் டாக்கி
வந்த நாட்டர சன்கோட்டை உள்ள
வடகலை வேள்வி நாடெங்கள் நாடே (18)

வாச மானதென் பாண்டிநன் னாடு
மதுரை நாட்டில் வளருமின் னாடு
காசி னிக்குட் கதிக்கின்ற நாடுமுன்
கம்பர் வந்து துதிக்கின்ற நாடு
பூசு ரர்க்கன்ன தானம்செய் நாடு
புலவர் மேலபி மானம்செய் நாடு
ராச லெட்சுமி கண்ணுடை யாளருள்
நல்கும் நாட்டர சன்கோட்டை நாடே. (19)

## நகரவளம் கூறுதல்

சொல்லி னுலிசை கொண்ட நகரம்
சுகிர்த வாவிகள் கண்ட நகரம்
நெல்லி னுல்நிதி தேடும் நகரம்
நிதியி னுல்தர்மம் நீடும் நகரம்
எல்ல வர்க்கும் உவந்த நகரம்
இளசை வாழ்வு மிகுந்த நகரம்
நல்ல நாட்டர சன்கோட்டை ஏழூர்
நகரம் எங்கள் நகரங்காண் ஆண்டே. (20)

செம்பொன் வேதியர் மாதா பிதாகுரு
தெய்வந் தன்னை வணங்குவ தல்லால்
விம்ப மாமுடி வேந்தரை யும்புவி
மீதி னில்வணங் காத நகரம்
கும்பிடு தோறும் கண்ணுடை யாளைக்
குடிவ ளர்க்கும் குலதெய்வ மென்று
நம்பும் நாட்டர சன்கோட்டை ஏழூர்
நகரம் எங்கள் நகரங்காண் ஆண்டே. (21)

சென்று நற்குடி மாறன் அழைக்கச்
சிறந்த காவிரிப் பூம்பட் டணத்தில்
அன்றி ருந்துபொன் தேரேறி வந்தோர்
அருவி யூர்சுந் தரந்தென் இளசை
என்று மூன்றில் இளசை எனப்புகழ்
ஏழு மாநகர் வாழும் வணிகர்
நன்றி சேர்கண் ணுடையாளைப் போற்றும்
நகர மெங்கள் நகரங்காண் ஆண்டே (22)

கண்ணி னுல்மத யானை நிறுத்தும்
கடலில் விட்ட கனகம் அழைத்தும்
பண்ணுகந் தவ்வை பாடலுக் கீந்துநற்
பந்தற் காற்குப் பவளம் நிறைத்து
விண்ணு யர்ந்தபொன் மேரு வுரைத்துமுன்
மீனவன்முடி சூட்டியும் மெய்யாய்
நண்ணு கீர்த்தி படைத்த வணிகர்
நகரம் எங்கள் நகரங்காண் ஆண்டே (23)

கற்றவர் புகழ்மூன் ருங்குலம் வாழக்
கம்பனுர் கோயில் செம்பொனுல் வேய்ந்தோர்
உற்ற சீரகத் தார்புனை மார்பர்
உயர்ந்த சிங்கக் கொடிவிரு துள்ளோர்
சுற்ற மாமறை ஏழுகற் புள்ளவர்
துங்க மாம்அலைத் தேனு றுடையோர்
நற்ற மிழ்கண் ணுடையாளைப் போற்றும்
நகரம் எங்கள் நகரங்காண் ஆண்டே (24)

தேட்டு கந்தவள் கண்ணுடை யாட்குத்
திருவி ழாக்களி யாட்டம் சிறப்பு
பூட்டு தங்கத் திருவா பரணம்
புகழ்தி ருப்பணி பூசை உபயம்
கூட்டு மெய்ப்பொரு ளான நகரம்
குடகர் நாட்டில் வடகலை வேள்வி
நாட்டு நாட்டர சன்கோட்டை ஏழூர்
நகரம் எங்கள் நகரங்காண் ஆண்டே. (25)

நீரெல் லாம்நிறை தாமரைக் கூட்டம்
நிலமெல் லாம்விளை நெல்மணி ஈட்டம்
தேரெல் லாம்நவ ரத்னசிங் காரம்
தெருவெல் லாம்திருத் தோரண வாரம்
பேரெல் லாமுயர் கண்ணப்பன் கண்ணம்மை
பேச்செல் லாம்தேவி காரண காட்சி
பாரெல் லாம்புகழ் கண்ணுடை யம்மன்
பனசை மாநகர் ஊரெங்கள் ஊரே. (26)

கச்சி ருப்பது மங்கையர் கொங்கை
கடனி ருப்பது அடுத்தோரைக் காக்கும்
குச்சி ருப்பது கோதையர் கொண்டையில்
கோளி ருப்பது ராசிகள் தோறும்
தச்சி ருப்பதுகண் ணுளர் சேர்க்கையில்
தாழ்ந்தி ருப்பது கூபந்த டாகம்
பச்சி ளங்கிள்ளைக் கண்ணுடை யம்மன்
பனசை மாநகர் ஊரெங்கள் ஊரே. (27)

தடையென் றுள்ளது வாழை மடற்குள்
தரிசென் றுள்ளது மாதர் சிலம்பில்
கடையென் றுள்ளது சந்தை வகுப்பில்
கலியென் றுள்ளது வர்த்தகர் பொன்னில்
கிடையென் றுள்ளது பாற்பசுக் கூட்டம்
கெலியென் றுள்ளது வன்கலிப் போரைப்
படையென் றுள்ளது பாலுடன் அன்னம்
பனசை மாநகர் ஊரெங்கள் ஊரே. (28)

## தீர்த்தச் சிறப்பு

விண்ட லம்பணி தேவி திருக்குளம்
வீரகண் டான்மெய்ச் செங்க மலத்தான்
மண்ட லம்பெறு தீத்தார் குளம்நல்ல
வாத்தியார் ஓடை நாயன்மார் வாவி
எண்டி சைக்கும் உயர்சொக்கன் ஊரணி
ஏழு தீர்த்தமும் சூழுந் தடாகம்
கண்டு எம்மகிழ் நாட்டர சன்கோட்டை
கண்ணு டையவள் ஊர்எங்கள் ஊரே. (29)

### காரணக்காரர்

கனக மேவிய ராச கரத்துடன்
கற்ப காலம் வளர்நக ரத்தார்
பனசை நாட்டுள்ள நாட்டுக் கணக்குப்
பரம்ப ரம்வரும் தர்மகர்த் தாக்கள்
தினமு கந்திடு நாட்டர சன்கன
செட்டி தேவன் ஜெகதல மெச்சும்
ஜனக ராஜன் கரியான் குளியான்
சதிருள் ளவடக் குத்தெரு வானும் (30)

வட்டகை சூழும் பேய்வெட்டி காஊ
வலையர சன்வரும் கொல்லு தச்சு
திட்ட வட்டம்செய் தேர்வேலைக் கொத்தர்கள்
சேரவேதிரு நாள்மண் டபத்தில்
கட்ட ஊப்படி தீர்த்தந் திருநீறு
கார ணம்பெருங் கண்ணுடை யம்மன்
இட்ட மாகிய நாட்டர சன்கோட்டை
ஏழூர்க் கும்முதல் ஊரெங்கள் ஊரே. (31)

### ஊர் வளப்பம்

கொந்து லாவிய சூரக் குளம்புதுக்
கோட்டை புல்லணி ஈச்சங் குடியும்
ஐந்தரு வும்வளர் இலுப்பைக் குடியும்
ஆனை மாரி யுடன்கட லாஞ்சி
வந்தணை செய்யும் செட்டி குளம்சிறு
மாரு வெட்டிபொன் னுங்குடி பத்தும்
இந்த ஊர்முதல் நாட்டர சன்கோட்டை
ஏழூர்க் கும்முதல் ஊரெங்கள் ஊரே. (32)

நீணி லம்புகழ் தெற்குத் தெருவில்
நிறைந்தி ருக்குமல் லூர்பனங் காடி
சேணி லங்கும் புகழ்சூரை பத்தி
திகழு டைக்குளம் செங்குள மாத்தூர்
வாணி யங்குடி ஊத்திக் குளமெழில்
வாய்த்த வெள்ளஞ்செய் வேப்பங் குளமும்
காணி கொண்டருள் நாட்டர சன்கோட்டைக்
கண்ணு டையவள் ஊரெங்கள் ஊரே. (33)

சோலை யெங்கணும் வானரந் தாவச்
சுளைப்ப லாக்கனி மாவொ டரம்பை
மேல திர்ந்துவி ழுந்துசெ ழுங்கனி
விண்டு தேறல்கள் மேதி யருந்தி
பால ஊந்துசெஞ் சாலிவி ளைந்து
பழன மெங்கும் பணிலம் உலாவும்
வாலை சுந்தரி கண்ணுடை யாள்பண்ணை
வாய்த்த செந்நெற் குடியெங்கள் ஊரே. (34)

வெள்ள மேல்மிகத் துள்ளிடு மீன்கள்
விரிந்த கஞ்சம் சொரிந்திடும் தேன்கள்
உள்ளி ருந்துவெள் ளோதிமம் சேரும்
உழவு சாலில் வளைகள்வந் தூரும்
பள்ளி யர்கள் குரவை முழக்கம்
பழக்கும் சோலைக் கிளிக்கும் பழக்கம்
வள்ளி மாமியார் கண்ணுடை யாள்பண்ணை
வாய்த்த செந்நெற் குடியெங்கள் ஊரே. (35)

குங்கு மங்கமழ் மங்கையர் கொங்கை
குடங்கள் கொண்டு குளிர்புனல் நீந்தும்
பொங்கு தண்புனல் ஓடை கொடிக்கால்
புறவும் நீள்வயல் பூங்கா வனமும்
சங்க ணிந்தவள் தேரின்முன் நின்று.
தரள ராசிசந்த் ரோதயம் காட்டும்
செங்கண் மால்தங்கை கண்ணுடை யாள்பண்ணை
சேர்இ லுப்பைக் குடியெங்கள் ஊரே. (36)

பூவில் வண்டுகள் உண்டு களிக்கும்
பொருப்பில் வானரம் தேன்கொப் பளிக்கும்
மாவில் வாழ்குயில் மாரனைக் கூவும்
மறுகில் வந்திளம் தென்றல் உலாவும்
காவில் வேழம் கமுகைப் பொருவும்
கன்ன லைப்பொரு வுங்கதிர்ச் செந்நெல்
தேவி கண்ணுள்ள நாச்சியார் பூம்பண்ணை
சேரி லுப்பைக் குடியெங்கள் ஊரே. (37)

## பள்ளியர் குயிற்சிந்து பாடுதல்

நற்றமிழ்சேர் கண்ணுடைய நாயகியாள் என்னையன்பாய்ப்
பெற்றவள்சேர் நாட்டுவளம் பேர்விளங்கச் சொல்லியபின்
கொற்றமத வேள்குயிலைக் கூவாய் குயிலேஎன்று
உற்றதிருப் பள்ளியர்வந் துள்ளமகிழ்ந்து ஓதுவரே. (38)

### குயிற்சிந்து

சுகந்தமலர்ச் செழுங்கமலக் கண்ணுடையாள் சந்நிதிநற்
சொன்னமய மாய்த்துலங்கக் கூவாய் குயிலே
மகிழ்ந்துசெய்யும் களியாட்ட வைகாசித் திருநாளும்
மாருமல் விளங்கவென்று கூவாய் குயிலே
செகந்துதிக்கும் சிவன்கோயில் கோபுரமும் குறைமுடிந்து
திருத்தேர்கொண் டருளவே கூவாய் குயிலே
உகந்தபெரு மாள்கோயில் திருமதிலும் மண்டபமும்
உபயபூ சைநடக்கக் கூவாய் குயிலே. (39)

வயனிருவர் பரவுமுத்து வடுகநா தேந்த்ரதுரை
மார்க்கண்டன் போலிருக்கக் கூவாய் குயிலே
உயர்குழந்தைத் துரையரசு அரசுகள் குமாரவற்கம்
உகந்துபெற வரந்தரவே கூவாய் குயிலே
தயவுள்ளமெய்ஞ் ஞானதுரை தர்மசமஸ் தானபதி
தழைத்தோங்கி வளரவே கூவாய் குயிலே
நயமிகுகண் ணுடையவட்கு இலுப்பைக்குடி ஊர்கொடுத்த
ராசசிங்கம் இவனென்று கூவாய் குயிலே. (40)

படியிலுயர் வேதியரும் பசுக்குலமும் இசைக்கவிசொல்
பாவலரும் மிகவாழக் கூவாய் குயிலே
கொடியேற்றத் திருவிழா பரம்பரமண் டலபுருடக்
குருக்கள் வந்து நடத்தவே கூவாய் குயிலே
நெடியதடம் புவிவாழ்கத் தானதலம் பரிகலத்தார்
நிறைவாழ்வு பெற்றிருக்கக் கூவாய் குயிலே
அடியடிவா ழைகளான அருச்சனைசெய் பாரனசவர்
அணைவோரும் இங்கிருக்கக் கூவாய் குயிலே (41)

சட்டமொடு மழைசொரிய ஊர்க்கிடையில் நிலம்விளையச்
சாணுன்கு எம்பெருகக் கூவாய் குயிலே
சிட்டர்புகழ் இலுப்பைக்குடி செந்நெற்குடி முதலான
தேவதா யம்விளையக் கூவாய் குயிலே
அட்டதிக்கும் பிரண்டைக்குளம் பேய்வெட்டி காளையுழ
அடையோலைக் கதிகம்வரக் கூவாய் குயிலே
கட்டளையாய்த் திருவிழாக் காணிக்கை மூன்றுபணம்
கனிந்துதரும் குடிதழைக்கக் கூவாய் குயிலே. (42)

சதிரில்வரும் பயிர்ப்பார்வை எண்பதுக்கெண் பதுவரைக்கும்
தானியங்கள் தொகைபிறக்கக் கூவாய் குயிலே
கதிர்விளையும் பண்ணைமுதல் கட்டுக்கிடை ஊர்க்கூர்நெற்
களஞ்சியமென் மேலும்வைக்கக் கூவாய் குயிலே
அதிகதிரு வாபரணம் பூசைமிச்சம் வருடமொன்றுக்(கு)
ஐயாயிரம் பொன்காணக் கூவாய் குயிலே
பொதிபொதியாய் அரிசிவிட்டுத் திருநாள்மண் டபம்நடத்தும்
புண்ணியர்கள் மிகவாழக் கூவாய் குயிலே. (43)

தேவாதி தேவர்பணி கண்ணுடைய வள்நாடு
தென்பனசை ஊர்செழிக்கக் கூவாய் குயிலே
பூவாசம் குலவுபஞ்ச மாதேவி கீழக்குளம்
பூத்தகுடி பொலிபொலியக் கூவாய் குயிலே
கூவாணி வீருணி கண்டங்காத் தான்சோழன்
கோட்டைநிலம் சுதையாகக் கூவாய் குயிலே
நாவாணர் துதிசெய்யும் பெருமாளம் பலத்தாடி
நஞ்சைபுஞ்சை விளையவே கூவாய் குயிலே. (44)

கனவிசய ரகுநாதச் சேதுபதி செய்தகொடிக்
கம்பமண்ட பந்திகழக் கூவாய் குயிலே
புனிதமுறு சந்நிதிமுன் முகப்புமண்ட பம்முடித்த
புகழ்நகரத் தார்விளங்கக் கூவாய் குயிலே
தனதுஈஸ்வ ரவருடம் புதுத்தேர்வைத் திடுநகரம்
தழைக்கும்ஊ ரவர்வாழக் கூவாய் குயிலே
மனமகிழும் கோபுரமும் கட்டிவைத்த ஊர்க்கணக்கன்
மகிபாலன் குலம்விளங்கக் கூவாய் குயிலே (45)

இலகுதிரு விளக்குபயம் நிலங்கொடுத்தோர் பணங்கொடுத்தோர்க்(கு)
இனியவரம் கொடுக்கவென்று கூவாய் குயிலே
பலவுபயம் நகைகள்திருப் பணிஉபயம் நடத்தினவர்
பலவுபயம் பெற்றிருக்கக் கூவாய் குயிலே
குலவுதனிக் களியாட்டம் முன்புகொடுத் தவரின்னம்
கொடுப்பவர்கள் குலம்வாழக் கூவாய் குயிலே
உலகறியச் சூலம்போட் டபிஷேகப் பால்பசுவிட்(டு)
உண்மைசெய்தோர் நன்மைபெறக் கூவாய் குயிலே (46)

திங்கள்தோறும் மழைசொரியத் தேசமெல்லாம் மிகவிளையத்
தினமும்அக விலையிறங்கக் கூவாய் குயிலே
எங்குநில மானவட கலைவேள்வி நாடுநகர்
ஏழூர்ப்பற் றும்செழிக்கக் கூவாய் குயிலே
சங்கநிதி நாட்டரசன் கோட்டைவள நாடுநகர்
சகலஜன மும்தழைக்கக் கூவாய் குயிலே
மங்களகல் யாணசுப சோபனம்பெற் றுலகேழும்
வாழிமிக வாழியென்று கூவாய் குயிலே. (47)

## மழை பெய்ய வேண்டுமென்று, அம்மையை வேண்டித் திருக்குளம் வெட்ட நாளிடுதல்

மெய்யதிசேர் கண்ணுடைய வித்தகிபொற் றுள்பணிந்து
வையகமெல் லாம்செழிக்க மாரிதர வேணுமென்று
பையவரும் பல்சேரிப் பள்ளியரெல் லாம்குரவை
செய்யமகிழ் வாய்க்குடும்பர் சேங்கைவெட்டுக் கூட்டினரே. (48)

கன்னல்வளர் பனசைநன் னகரந்திகழ்
கண்ணுடைய நாச்சியார் பண்ணைதனில்
மன்னுபுகழ்பெரிய செந்நெற் குடிப்பள்ளரும்
வடிப்பமான இலுப்பைக் குடிப்பள்ளரும்
இன்னிலமெல் லாமுள்ளமன் இனக்குடும்பரும்
இடங்கைவலங் கையுள்ளோர் அடங்கலும்தான்
செந்நெல்விரைப்பு எடுத்துமுன்னே சிறப்புவிட்டுச்
சேங்கைவெட்டுக்கு நாளிட்டார் பாங்காகவே. (49)

## திருக்குளம் வெட்டுதல்

நித்தமுங் கண்ணுடையாள் சித்தமகி ழும்பண்ணை
நீடுங்கலை வேள்விநன் னடுதனில்
கொத்தடி மைக்குடும்பர் அத்தனைபே ரும்வந்து
கொட்டுங் குரவையுமுன் இட்டுவரப்
புத்தம் புதுமதுவில் பத்துலட் சங்கலசம்
பூங்கோயில் முன்னிரைத்துச் சேங்கையிற்போய்
மெத்தமண் வெட்டிக்கொண்டு கூடைமண் ணெடுத்தேற்றி
மீண்டுவந்து கும்பிட்டடி வேண்டினரே (50)

## எருதுகட்ட நாளிடுதல்

செங்கமலக் கண்ணுடைய தேவிதிருத் தாள்வணங்கித்
தங்கள்குடிச் சேங்கைவெட்டுச் சட்டமுடன் செய்ததற்பின்
எங்குமொரு நாளிட்டு எருதுகட் டக்குடும்பர்
அங்குமிங்கும் நாளிட்டு அகமகிழ்ந்து கூறினரே. (51)

## கிராம தேவதைகளை வழிபடுதல்

வடிவுள்ளமக மாயியான்கண் உடையவள்பதம் போற்றியே
வனசைமாநகர் வேள்விநாட்டுள்ள பனசைமாநகர் காப்பவர்
குடிவளர்த்திடும் கொட்டூருடையார் குருந்தூருடையார் சாக்கையன்
கூறுபஞ்சமா தேவியுகந்த வீறுசேவக ராயற்கும்
படிபுகழ்ந்திடும் ஊருகாவலன் பஞ்சாட்சரமுள் ளவருக்கும்
பரவுநோன்புக் கூற்றர்மேற்றிசை பார்த்தபொய்சொலா மெய்யர்க்கும்
நெடியகரும்பு தேங்காய்பூப்பழம் நிரம்பப்பூசை நடத்தியே
நிகரில்ஐயனர் எருதுகட்டுக்குப் பகரும்நாளிட் டார்களே (52)

தெள்ளுதமிழுக் குகந்ததேவி கண்ணுள்ளநாச்சியார் பண்ணையில்
செய்யிலுகந்த செந்நெற்குடியில் வெய்யிலுகந்த ஐயனர்
அள்ளல்உரஞ்சேர் இலுப்பைக்குடியில் ஆதீனமழ கையனர்
அங்குள்ளவர்க்கும் இங்குள்ளவர்க்கும் பொங்கலுமிட்டுப் போற்றியே

புள்ளிமறுவில் லாததோர்கருந் துள்ளுமறியைப் பெலியிட்டு
புரவியெடுத்துக் குரவைமுழக்கிப் பூம்பந்தலின்கீழ் நிறுத்தியே
மெள்ளவேவலைப் பெரியான்கூத்துடன் மிகுந்தவேஷங்கள் ஆடவே
விருதுகட்டிமுன் ஐயனூர்க்கெலாம் எருதுகட்டினர்
குடும்பரே. (53)

## எருதுகட்டுச் சிறப்பு

கம்பு கட்டிய சேரு டிக்குடை கொம்பு கனகத் தப்புடன்
கண்ணக் குடும்பன் முதலா னசில பண்ணைக் குடும்பர் சூழவே
கும்பு கூடிய வலங்கை வகுப்பில் கூட்டம் கூட்டமாய் முன்வரக்
கொண்டா டிக்கொண்டு தீர்த்தம் திருநீ றுண்டானபடி
வாங்கியே
நம்பி ரான்முனே நாட்ட ரசனும் நாலு காரணக் காரரும்
நாச்சம் காளை வடம்வெட்டிக்கன பாச்சல் காட்டும்
பரையெல்லாம்
சிம்பும் எருது வடந்தொட் டிழுத்துக் கொம்பு பிடித்து விளையாடி
தெய்வச் சடங்கு துடங்கி னபடி சிறந்த திருநாள் நடந்ததே.
(54)

## களியாட்டத் திருநாள் நடத்த நாள் இடுதல்

பூவில் மழைபெய்யப் புகழ்ந்தெருது கட்டியபின்
காவியெனும் நீள்கருணைக் கண்ணுடையாள் கண்ணுடைய
தேவிகளி யாட்டத் திருநாள் நடத்துதற்கு
நாவிலுரை சொன்னபடி நாளிட்டார் ஊரவரே. (55)

## களியாட்ட வீடு கட்டுதல்

வித்தைக் கும்கன புத்திக் கும்புகழ் மேன்மைக் குந்திறமானோர்
மிஞ்சி னுலடை யாத காவிரி பஞ்சி னுலுடன் கண்டோர்
வர்த்திங் குங்கன செட்டு ளோர்முழு மாணிக் கப்பிச்சை இட்டுளோர்
வாழு மாநகர் மகரா ஜர்கள் ஏழு மாநகர் வாணிகர்
தித்திக் குங்கன கண்ணுள் ளசிவ சக்திக் கன்புடன் நித்தமும்
தேட்டம் செய்திடும் பொருள றங்களி யாட்டம் செய்திட வென்றே
எத்திக் கும்திரு முகமேவி முன் மெத்தக் கும்புகள் கூடி
ஈடுகட்டிய செம்பொ னுல்புது வீடு கட்டினர் மிகவே (56)

## களியாட்ட வீடு அலங்கரித்தல்

வீடு கட்டி விலாச மாயதில் ஊடு சித்திரம் எழுதி
விந்தை யொத்தபொன் வாச லில்நிறை பந்த ரிட்டலங் கரித்து
ஏடு தொட்டெழு தாத தாமரை தேடு தற்கரும் பொருளாய்
எங்கள் மெய்ப்பொருள் கண்ணுடை யாளைத்
தங்கள்மெய்ப்பொருள் என்னவே
நாடு தற்கனு கூல மேமிக நீடு மெய்ப்புகழ் வாணிகர்
நன்ன கரங்கள் எல்லாம் வந்து பொன்ன கரம்போல் இருக்கக்
கோடு வைத்த வன்முலை யாரன் போடு நிற்பது போலக்
கூடு வாரிசை பாடு வார்விளை ஆடு வார்களி கூர்ந்தே. (57)

## முளைக்கொட்டுத் தொடங்குதல்

ஊரவர்கள் நாளிட் டுகந்தமணிப் பொன்னிலங்கக்
காரமிகு செல்வக் களியாட்ட வீடுதனில்
ஆரமுலை மின்னார்கள் அம்மைபுகழ் பாடியபின்
கூரநிதம் வந்துமுளைக் கொட்டிவிளை யாடுவரே. (58)

## முளைப்பாட்டு

கட்டழகி உத்தமியாம் கண்ணுடைய நாயகிமேல்
இட்டமிகு செந்தமிழால் இன்பமுளைப் பாட்டுரைக்க
சிட்டர்புகழ் தென்பனசைத் தேசிவி நாயகனார்
அட்டதிசை போற்றுமத யானைமுகன் காப்பாமே.

பூமடந்தை நாமடந்தை புவிமடந்தை புகழ்மடந்தை
மாமடந்தை என்னவரு மலர்மடந்தை மாதரசி
மாதரசி வாழ்வரசி மண்ணரசி விண்ணரசி
சீதரனார் சோதரியாம் தெய்வப் பிராமணத்தி
தெய்வப் பிராமணத்தி சீதேவி நாச்சியார்
மெய்வாய்த்த பூங்கரும்பு விள்ளரிய தெள்ளமிர்தம்
தெள்ளமிர்தம் துள்ளமிர்தம் தேறப் பழுத்தகனி
பிள்ளைகளாய் மூவரையும் பெற்றெடுத்த பேடைமயில்
பேடைமயில் எனவிளங்கும் பேருள்ள பிடாரியம்மன்
ஊடுருவப் பார்வைசெயும் உண்மையுளோர் கண்டபொருள்

கண்டபொருள் அன்புடையோர் கருணைப் பெருக்காறு
தொண்டர்மனக் கோவிலுக்குத் தூண்டா மணிவிளக்காம்
மணிவிளக்காம் விலைமதியா மாற்றதிக மானதங்கம்
பணிவிளக்காம் செம்மலைமேல் பச்சை படர்ந்தகொடி
கொடியிடையாள் பிடிநடையாள் கும்பிடுவோர் குலதெய்வம்
வடிவழகு பூத்தகடல் மலையரசன் வளர்த்தகிளி
வளர்த்தகிளி சமர்த்திமகள் வள்ளியம்மை மாமியார்
முளைத்தெழுந்த கணபதிக்கும் முருகனுக்கும் ஒருதாயார்
ஒருதாயார் இவளெனவே உலகமெல்லாம் ஈன்றகன்னி
விருதுமகி டாசுரனை வென்றருளும் வீரசக்தி,
வீரசக்தி வீரதுர்க்கை வேதாளக் கொடியிடையாள்
பாரசக்தி கோரருத்ரி பரமசிவன் கண்ணாட்டி
நாட்டிலுயர் கலைவேள்வி நாடுடையாள் நகருடையாள்
தேட்டிலுயர் வணிகருள்ள தென்பனசை மாநகராள்
மாநகராள் பாரசைவர் வங்கிசமே பூசைசெய்யும்
நானிலஞ்சேர் பூலோக நாயகியாம் கண்ணுடையாள்
கண்ணுடைய நாயகிக்குக் கண்குளிரப் பார்த்திருக்கும்
எண்ணரிய நவநிதியும் இசைந்துவைத்த பொக்கிஷமாம்
பொக்கிஷஞ்சேர் ஆபரணம் புதுவயிரத் தேர்திருநாள்
மிக்கபொருள் உள்ளதெல்லாம் மிகத்தேடி வைத்தவர்கள்
வைத்தவர்கள் முத்தமிழை வளர்த்தவர்கள் மரபுடையோர்
எத்திசையும் கொண்டாடும் ஏழுநகர் வாழ்வணிகர்
வாழ்வணிகர் அம்பலமும் வளர்குடியும் பலகிளையும்
சூழ்வணிகர் ஊரவர்கள் சொன்னபடி நன்னயமாய்
நன்னயமாய்க் களியாட்டம் நடத்துதற்கு நாள்குறித்து
மின்னுமணிக் களியாட்ட வீடுகட்ட வேணுமென்று
வேணுமென்று நாட்டவரில் மிக்கான கிளைப்பிரிவில்
காணிகொண்டு மதுவெடுக்கும் கன்னியர்கள் மனைதனிலும்
மனைதழைக்கும் ஊர்க்கணக்கன் மகிபாலன் மனைதனிலும்
அனுதினமும் திருப்பதி ஐயங்கார் சொற்படியே
சொற்படியே அங்குமிங்கும் சுபதினத்தில் தச்சுசெய்து

விற்பனஞ்சேர் கண்ணுளன் விஸ்வகுல தெய்வதச்சன்
தச்சப்பிச்சன் ஆசாரி தனதுகொலுச் செல்லனுந்தான்
வச்ரமணி மாளிகையாம் வாசலிலே நடைகூடம்
கூடநின்று முகூர்த்தமிட்டுக் கோடிபொன் னேத்திசெய்து
நீடியபூம் பந்தரிட்டு நிறைமலரால் அலங்கரித்து
அலங்கரித்த திருமணையில் அம்மணைப்போல் உருவெழுதி
துலங்குதெரு வீதியெல்லாம் தோரணங்கள் மிகநிரைத்து
நிரைத்துவரும் விபவருடம் நிறைந்தகளி யாட்டத்தின்
விருதுரைக்கும் பதின்மூன்றும் விக்கிரம வருடமதில்
வருடமுதல் திங்களென வந்தசித்தி ரைமாசம்
திருவளர்ஏ ழாம்தேதி சேருமுதல் செவ்வாயில்
வாய்த்ததிருக் கோயிலுக்கும் மற்றுமுள்ள கோயிலுக்கும்
சாத்துஎண்ணெய் அமுதுபடி சகலசிறப் பும்கொடுத்து
தன்னகரில் பெண்களெலாம் தயிலமிட்டு நீராடிப்
பொன்னுடமை பொற்புடவை பூஷணங்கள் மிகப்பூண்டு
நளபாக மாய்ச்சமைத்த நல்லமுது கறிவகைகள்
வளமான போசனங்கள் வர்க்கவகை தானருந்திப்
பங்கயம்போல் முகமலர்ந்து பாக்கிலையும் தான்பருகிக்
குங்குமமும் சந்தனமும் குழைத்து மிகப்பூசித்
தெண்ணீரி லேவிளைந்த சீரகச்சம் பாவிரையாம்
தொண்ணூறு கோட்டைவிரை சொரிந்துகட கத்தளந்து
கொட்டு முழக்குடனே குரவையிட்டுக் கோயில்முன்னே
சட்டமுடன் கொண்டுவந்து தளவிசையின் மேல்விரித்து
விந்தையுடன் சந்நிதியில் வீரபட்டன் மனமகிழ்ந்து
சந்தனம்வி பூதிதரச் சகலஜன முந்தரித்துக்
காதலுடன் மீளவந்து களியாட்ட வாசலிலே
கோதையர்கள் சேரமுளைக் கொட்டிவிளையாடுவரே.
நல்லதொரு செவ்வாய்க்கு நாலம்நாள் வெள்ளிதனில்
மெள்ளவந்து வாரியதை விரைகளெல்லாம் கோட்டைகட்டி
உற்றபெருந் திருக்குளத்தில் உள்ளபடி நணையவைத்து
மற்றவெள்ளிக் கைந்தாம்நாள் வருமிரண்டாம் செவ்வாயில்

நணைத்தவிரை தணைச்சொரிந்து நாச்சியார் மண்டபத்தில்
கனத்தபுங்கந் தளைமேலே கன்னியர்கள் தெளித்தனரே
உம்பருடன் தெளித்தமுளை உத்தமிகண் ணுள்ளவளை
நம்பினவர் கிளைபோலே நாளுக்குநாள் வளர்ந்ததுவே
முந்துமுளை வளர்ந்ததற்பின் மூன்றும்செவ் வாய்தனிலே
வந்துமுளை வாரியதை மறுதளத்தின் மேல்விரித்துச்
செவ்வாய்க்கு நாலாம்நாள் தெள்ளியதோர் வெள்ளிதனில்
கொவ்வையிதழ் மின்னார்கள் கூடிவந்து முளைவாரி
கண்டிருகண் களிகூர்ந்து களியாட்ட வாசலிலே
கொண்டுவந்து மாவெடுத்துக் குடத்தில்இள நீர்பெருக்கித்
தேனைக்க லந்தெடுத்துத் திரைவளைத்துப் பானைவைத்துப்
பானைக்கு மூன்றுசிராய் பக்கமதில் வைத்திடவே
புனிதமுள்ள தேவிமதுப் பொங்கி வழிந்திடுமாம்
இனியதொரு சுபதினத்தில் இருபத்தி ரண்டாம்நாள்
நறுமணங்கள் கமகமென நாலாம்செவ் வாய்தனிலே
பிரீதியுடன் ஒருசோட்டுப் பெண்களெல்லாம் நீராடிப்
பட்டுடுத்திப் பணிபூண்டு பரிமளங்கள் கமகமெனப்
பொட்டுமிட்டுக் களியாட்டப் புதுவீடு முன்புவந்து
நெடுநிலத்தோர் அதிசயிக்க நிறைந்திருக்கும் மதுக்குடத்தை
நடுவிருக்கும் ஒருகுடத்தை நாச்சியார் குடமெனவே
முறைமுறையாய்த் தெண்டனிட்டு முதல்மதுவைத் தானெடுத்து
நிறைகுடங்கள் ஆயிரமாம் நீலக்குடம் ஆயிரமாம்
சிறுகுடமும் பெருங்குடமும் செம்பொற்குடம் ஆயிரமாம்
நிறுக்கவொணு வெள்ளிக்குடம் நீலக்குடம் ஆயிரமாம்
பச்சைக்குடம் ஆயிரமாம் பவளக்குடம் ஆயிரமாம்
இச்சைப்படி ஒருகோடி இனியமதுக் குடம்வரவே
பேரிகையும் பூரிகையும் பெரியதவில் மத்தளமும்
வீராணம் பதினெட்டு மேளவாத்தி யம்முழங்க
நடக்குமுனம் சங்கீதம் நடநா டகசாலை
இடைக்கியங்கள் ஆலவட்டம் இசைந்தகுடை கவரிகுஞ்சம்
மதயானை மனுவரசு மண்டலிகர் புடைசூழப்

பதினுயிரம் தீவட்டி பகல்வத்தி நின்றிலங்க
சாந்தொடுபன் னீர்சுகந்தம் சாம்பிராணி கமகமெனப்
பூந்துகிலின் பாவாடை பொரிவாணம் பூச்சிதற
செகராஜர் மகிழ்வணிகர் தெருவீதி தனைச்சூழ்ந்து
மகராசி கண்ணுடையாள் மதுக்குடங்கள் வந்ததுவே
சொன்னபடி திசைநோக்கித் துள்ளுமரிப் பலிகளிட்டு
சந்நிதிமுன் வந்துநின்று சாம்பிராணித் தூபமிட்டுப்
பத்துலட்சம் குட்டிவெட்டில் பனியளவு குருதியுண்டோ?
மெத்தப் புதுமைஎன்று விண்ணவர்பூ மழைசொரிய
கண்ணுடையாள் திருவிருப்பில் கண்ணுடையாள் மதுக்குடத்தைக்
கண்ணுடையாள் முன்புவைத்துக் கன்னியர்கள் போற்றுவரே
வடக்குவாய்ச் செல்லியம்மை மாதாவே பூசைகொள்வாய்
அடைக்கலங்கள் காத்திடுமென் ஆத்தாளே பூசைகொள்வாய்
பூசைகொள்வாய் பூசைகொள்வாய் பூங்குயிலே பூசைகொள்வாய்
ஈஸ்வரியே பூசைகொள்வாய் என்றுமிக வேபணிந்து
நாலுதிக்கும் சனங்கள்வர நகரமெல்லாம் சூழ்ந்துவர
வாலிபமாய் மங்கையர்கள் மனையில்வந்தார் சோபனமே
பார்வாழி சந்நிதிமுன் பரிகலமும் தான்வாழி
சீர்வாழி பேர்வாழி தென்பனசை ஊர்வாழி
மனுவரசு சேருமுத்து வடுகநா தேந்த்ரதுரை
அனுதினமும் புவிபுரக்க அரசுபெற்று வாழியவே
சகலகுண மதியூகி தாண்டவரா சேந்த்ரதுங்கன்
புகழ்வளர மதிவளரப் பூவுலகில் மிகவாழி
வாழிமிக நாடுநகர் வாழ்வணிகர் கிளைவாழி
வாழிமுனைத் தமிழ்வாழி வாழிமிக வாழியவே. (59)

## கும்மியடித்தல்

தாயிலுமெய் யன்புளதாய்த் தண்ணளிசேர் கண்ணுடையாள்
கோயில்முனைப் பாட்டுரைத்துக் கொட்டிவினை யாடியபின்
வாயிதழ்செந் தேனெழுக வாலிபமின் னார்வகுப்பில்
ஆயிரம்பேர் கும்மியடித் தன்பின்விளை யாடுவரே. (60)

## கும்மிப் பாட்டு

செந்தா மரைத்திருக் கண்ணுடை யாளம்மன்
சீதேவி மேற்கும்மிப் பாட்டுரைக்க
கொந்தாரும் கூந்தல் மடவாரே இங்கே
கும்மி யடிப்போம் வாருங்கடி

கும்மி யடித்துக் கவிபடித்து அம்மன்
கோயில் களியாட்ட வாசலிலே
ரம்மிய மாக விளையாடி ஞல்மிக
நன்மை தருவாள்கண் ணுத்தாளடி

கண்ணுத்தா ளைப்போலே தெய்வமுண் டோஅவள்
காரணக் காட்சிபோல் காட்சியுண்டோ.
விண்ணுட்டில் உள்ளவர்க் காணுலும் இந்த
மெய்யது வுண்டோடி தோழிப்பெண்காள் ?

மெய்யது சொன்ஞல் மலைபோலே பெண்காள்
வேடிக்கை சொர்ணச் சிலைபோலே.
துய்யவள் கண்ணுள்ள நாச்சியா ரின்புகழ்
சொல்லத் தொலையாது தோழிப்பெண்காள்.

சொல்லச் சொல்லவரும் நாட்டமடி வந்து
சூழும் வெகுசனக் கூட்டமடி
செல்லத் துரைச்சிகண் ணுத்தாளுக் குமனத்
தேட்டமெல் லாம்களி யாட்டமடி.

தேட்டமெல் லாம்கண்ணுத் தாய்மே லேஅவள்
சித்தமெல் லாம்இந்தச் சேய்மேலே
தோட்டமெல் லாம்மலர் கொய்தெடுத்து நாமே
சூட்டுவோம் வாருங்கள் தோழிப்பெண்காள்.

சூட்டவும் மல்லிகைப் பூவிருக்கும் தீர்த்தத்
தொட்டி யடுத்தொரு மாவிருக்கும்
கூட்டுற வாய்த்தென்னங் காவிருக்கும் தேவி
கோவில் அடையாளம் பாருங்கடி.

கோவில் உடையாள் குளமுடையாள் பொன்னின்
கோபுர வாசல் வளமுடையாள்
தாயிலும் நல்லவள் கண்ணுடையாள் ஏழு
தாரணி காணி உடையாளடி.

காணிக்கு வாய்த்த மகராசி தெய்வக்
கள்ளிச்சி ஞானக் கருமறத்தி
மாணிக்கச் செட்டிச்சி கண்ணுத்தாள் இந்த
வையமெல் லாம்பெற்ற மாதாவடி

மாதாவென் ருலம்மன் தானிவ ளேசிவன்
வாழ்வு தருமஃல மானிவளே
சூதாம் தனத்திநம் கண்ணுடை யாளன்பு
சொன்ஞல்வெண் தாமரை மின்ஞளடி

மின்னே நமக்கென்ன தாட்சியடி இனி
மேலும் வரும்பொருள் ஆட்சியடி
கண்ணுலே காணலாம் காட்சியடி கண்ணுத்
தாயாரே பூலோக சாட்சியடி

பூலோக மானதோர் மங்கையடி புவி
பூத்தும் முதிராத கொங்கையடி
கோலா கலமலர் மங்கையடி அம்மன்
கோதண்ட பாணியார் தங்கையடி

கோதண்ட மாமலர் வாளியடி அண்ட
கூடம் இவள்பாத தூளியடி
மூதண்ட பத்திர காளியடி அம்மன்
மூவர்க்கும் தான்முத லாளியடி

தான்முத லாளியாய் வந்தாளடி வந்து
தந்தியைக் கந்தனைத் தந்தாளடி
வான்முத லாயுள்ள கண்ணுடை யாளிங்கே
வந்தாள் நம்மை உகந்தாளடி

மும்முல கெங்கும் நடுநீரில் வைத்து
நனைத்த நெல்லு முளைப்பதுண்டு.
அம்மன் அதிசயம் கண்டிய ளோவென்னீர்
அவித்த நெல்லு முளைக்குதடி.

நெல்லு முளைக்கும் களியாட் டந்தனில்
நேர்ந்து விடுங்கன துள்ளுமறி
சொல்லுமுன் வந்து பலியிட வேஒரு
சொட்டத் தணைரத்தம் தோணுதடி

தோணுமல் வீட்டினில் வைத்திருந்து பெண்கள்
சோடிப்புக் கேட்கக் கொடாதபொருள்
காணுமல் போகவும் கண்டிடவும் தேவி
காரணம் காட்டவும் கண்டோமடி.

கண்டுகண் டுள்ளம் களிகூர்ந்து தேவி
கண்ணுள்ள நாச்சியார் காரணத்தை
அண்டர் முனிவர் நவநாதி சித்தர்கள்
ஆரறி வாரடி தோழிப்பெண்காள்.

ஆரறி வாளிவள் நீதியடிகளி
ஆட்டத் திருநாள்முன் ஆதியடி.
சோரு மனத்தர் விரோதியடி அம்மன்
தூணில் உதித்தசெஞ் சோதியடி

தூணைத் துரும்பாக வாட்டுவ தும்பின்
துரும்பையும் தூணுக நாட்டுவதும்
காணுப் புதுமைகள் காட்டுவ தும்தேவி
கண்ணுடை யம்மன் கடாட்சமடி.

கண்ணுடை யம்மன் கருணைவைத் தால்பண்டு
காய்ந்த மரமும் கனிசொரியும்
பெண்ணுடன் ஆணும் பெறுவார்கள் அம்மன்
பேரிடப் பேரிடப் பிள்ளையடி

பேரிட்டுக் கும்மி அடியுங்கடி சற்றும்
பிந்தாமல் கும்மி அடியுங்கடி
நேரிட்டுக் கும்மி யடியுங்கடி பெண்காள்
நித்தமும் கும்மி அடியுங்கடி

நித்தமும் கண்ணுள்ள நாயகியை உங்கள்
நெஞ்சகந் தன்னில் நினைந்துகொண்டு
வர்த்தனைக் கும்மி அடியுங்கடி நல்ல
வடகலை வேள்விநன் ஞட்டுப்பெண்காள்

நாடு நகரமும் பொன்னு லேவரும்
நாலூர்ச் சனங்களும் பொன்னுலே
ஆடலும் பாடலும் பொன்னு லேகளி
ஆட்டப் பூமனை பொன்னுலே

பூவிரி பந்தலும் பொன்னு லேகண்டு
பூசிக்கும் பேர்களும் பொன்னுலே
தேவி மதுக்குடம் பொன்னு லேவைத்த
தென்னம் பாளையும் பொன்னுலே.

பொன்னுன பூங்கோயில் கண்ணுடை யாளம்மன்
பூங்குயி லும்வாழி புகழ்வாழி
நன்னுடு வாழி நகர்வாழி அம்மன்
நாட்டர சன்கோட்டை வாழியவே. (61)

## கும்மி யடித்ததும் மழைக்குறி தோன்றுதல்

தண்டா மரையுகந்த தாயிலுங்கண் ணுள்ளவளைக்
கொண்டாடிக் கொண்டுபெண்கள் கும்மிவினை யாடியபின்
கண்டார் மனங்குளிரக் காசினியெல் லாம்தழைக்க
உண்டாய் மழைக்குறிகள் உள்ளதெலாம் தோன்றியதே (62)

## மழைக்குறி

மூடுபனி மழைவந்து சாடுதுகுறி — வாயில்
முட்டைகொண்டு சிற்றெறும்பு கட்டியேறுது
நீடுமதி தன்னில்பரி வேடமிடுது — சூகை
நிரையிட்ட குளிவாயில் கரைகட்டுது
கூடுதோறும் கிடந்துஅன்றில் பேடுரைக்குது — மின்னல்
கொங்குமீள மும்எதிர்த்திட் டெங்குமின்னுது
தேடுபொருள் கண்ணுடையாள் நாடுதழைக்கப் — பண்ணைச்
சேரிப்பள்ளர் எல்லாமினிப் பூரித்திடுமே. (63)

சந்ததமும் துணையென்று வந்தவர்க்கெல்லாம் — அருள்
தாயகி சர்வலோக நாயகிஎனும்
அந்தரிகண் ணுடையவள் சிந்தைமகிழும் — பண்ணை
அன்னக்கொடி கட்டிவளர் செந்நெற்குடியும்

பிந்தாத இலுப்பைக்குடி எந்தவூரிலும் — வெள்ளம்
பெருகிமறு கால்விடவ ருகுதுமழை
சொந்தமான பண்ணையாண்டைக் கிந்தவயணம் — நாமே
சொல்லவரும் பண்ணைப்பள்ளர் எல்லவருமே. (64)

## மழைபெய்கிறது

கண்ணுடைய தாயார் களியாட்டங் கொண்டருளும்
தண்ணளியார் மெய்யருளாள் தாய்முகங்கா ணும்சேய்போல்
பண்ணை முகம்காணப் பயிர்முகம்பூ ரித்தெழும்பி
மண்ணுலகெல் லாம்செழிக்க மாரிசொரி கின்றதுவே. (65)

நீல முகில்கள் வடக்கு வாய்ச்செல்லி கோல
மேனிபோல் உருக்கொண்டு
நிரந்தர மாகப் பொதிகை வரைமேல் பரந்தி ரைந்துநீர் சொரிந்திட
வாலை கோமளை மகமாயி கையில் சூலா யுதம்போல் மின்னியே
வழக்கம் சேர்களி யாட்டப் பேரிகை முழக்கம் போல்மேகம்
குமுறியே
பால லோசனை கருப்பு வில்லினைப் போல வானிலே வில்லிட்டுப்
பத்துத் திசையும் பரந்து காலூன்றி மெத்தத் தானேகம் பீரமாய்
ஞாலம் புகழும் கருணைக் கண்ணுள்ள நாச்சி யார்திரு வருளைப்போல்
நதிசெய் வெள்ளம் பெருகி வந்த அதிசயம் பாரும் பள்ளீரே (66)

செகந்த ழைத்தருள் குறிஞ்சி புகுந்து குகன்தி ருப்பதம் போற்றியே
சிறந்து பாலையில் உறைந்து கண்ணுள்ள தெய்வத்தைமன
மேவைத்து
சுகந்த முல்லையில் முகுந்தன் மருந்தால் உகந்த பகவான் எய்தலில்
சொன்ன வருடன் தன்னை வணங்கிச் சின்ன வயிரத் திருக்கைமீன்
பகர்ந்த களிறு மசரை தேளி பஞ்சிலை கொண்ட சினைவரால்
பருமீ னுஞ்சிறு மீனும் குதிக்கப் பரிந்து கண்ணுள வம்மனைப்
புகழ்ந்தி டும்புல வோர்கள் மனையில் மிகுந்திடும் செல்வம்
வருதல் போல்
புதும ழைவெள்ளம் பெருகி வந்த புதுமை பாரும் பள்ளீரே. (67)

## நகரத்தார்கள் வைத்த பண்ணைக்காரன் வருதல்

வட்டநெடு வாவிகுளம் மாரிசொரி நீர்பெருகும்
திட்டமது கண்டுநல்ல தேவிபண்ணை உள்ளதெல்லாம்
சட்டமிட வென்றே தனித்துநக ரத்தார்கள்
கட்டளையாய் வைத்தபண்ணைக் காரன்வந்து தோன்றினனே. (68)

விக்கல்மிட றுங்குதிரை மொக்கணிவாயும் — கூன
வில்லுப்போல் முதுகும்சுக்கான் கல்லுப்போல் பல்லும்
முக்குறுணி சோறடையும் பக்கவயிறும் — பரு
முட்டுவாயில் மீசையில்ஏ ழெட்டுமயிரும்
கொக்குப்போல் நரைத்தலையும் சிக்கு நாற்றமும் — மாறு
குண்டுகண்ணும் தன்னிலேதான் கண்டுமகிழ்ந்து
திக்கரசி கண்ணுடையாள் மிக்கபண்ணையில் — நாளும்
சேரவந்த கோயில்பண்ணைக் காரனர் வந்தார் (69)

## பள்ளர்கள் வணங்குதல்

சாணுக்கொரு பொய்யனரே கும்பிடுகிறோம் — கோணத்
தடிக்கம்புக் கையனரே கும்பிடுகிறோம்.
தூணுக்கும்கால் நீண்டவரே கும்பிடுகிறோம் — வங்கு
சொரிபத்தி ஆண்டவரே கும்பிடுகிறோம்
வீணுக்கு வீண் பேச்சனரே கும்பிடுகிறோம் — குல்லா
வேடிக்கைக்கை வீச்சனரே கும்பிடுகிறோம்.
ஆணுக்குள் அழகனரே கும்பிடுகிறோம் — பண்ணை
ஆண்டவரே அடியார்கள் கும்பிடுகிறோம் (70)

## பண்ணைக்காரன் நெல்விதைகளைப்பற்றிக் கேட்டல்

நம்புபண்ணைக் காரன் நயினர்வந் தாரெனவே
கும்பிடுமுன் கண்ணக் குடும்பனைக்கண் டேகோயில்
கெம்பரைநெல் கட்டுக் கிடைவிரைநல் லோர் வகுப்பில்
சொம்புடனே சொல்லெனவே தொழுதுபள்ளன் சொல்வானே. (71)

### பள்ளன் நெல்விதைகளைப்பற்றிக் கூறுதல்

சொரிகுரும்பைநெல் லீர்க்குச்சம் பாவெள்ளைத்
துய்யமல்லிபொற் பாளை உண்டைக்கார்
வரிசைகொண்ட கொசும்பாக் கல்லுண்டை
வரசஞ்சம்பா மணவாரி வாலான்
நரியிரங்கலும் நானூறு கோட்டைநெல்
நாட்டரசன் கோட்டைக் கண்ணுடையாள்
பெரியபண்ணைக் கிசைந்த விரைகள்
பெருக்கமாய்வைத் திருக்கிறேன் ஆண்டே. (72)

### பள்ளன் மாட்டுவகை கூறுதல்

நெட்டைக் கொம்பன் குடங்கொம் பெருது
நெடிய வாலான் பனங்காய் மயிலை
சட்டைக் கேற்ற கருமறைக் காளை
தளப்பன் போர்எரு தல்லியன் காளை
கட்டைக் காளையும் கண்டதைஞ் ஞூறுண்டு
காளைக் கோன்கிடைக் காராம் பசுவும்
மட்டக் காளையும் கொட்டிய மாடும்
வகைக்கு நூறு தொகைப்படி ஆண்டே. (73)

விண்ணு ளோர்பணி கண்ணுள்ள தெய்வத்தை
மெய்யென் றெண்ணுத வீணர்கள் நெஞ்சில்
எண்ணும் அஞ்ஞானக் கட்டியைப் போலே
இருப்புக் கட்டி கரைத்த கொழுக்கள்
கண்ணி லேகண்ட தொண்ணூறு மேழி
கலப்பை ஏர்க்கால் வடமும் நுகமும்
பண்ணை ஏர்க்குள்ள சோடனை எல்லாம்நான்
பத்திரம் பண்ணி வைத்தேன் காண்ஆண்டே (74)

### பண்ணைக்காரன் வயலில் உரமிட ஆட்டிடையனை அழைத்துவரக் கூறுதல்

கோட்டைநெல்லும் மாடும் குடும்பன்வகை கூறியபின்
மீட்டுமந்தப் பண்ணை விசாரிப்பான் "மெய்ப்பாகத்
தேட்டமொடு கண்ணுள்ள தேவிவயல் ஆடுவைக்க
ஆட்டிடைய ரைப்போய் அழைத்துவா" என்ருரே. (75)

## ஆட்டிடையன் வருதலும், கிடைவைத்தலும்

நீட்டுரமும் தேட்டுரமும் நெல்லுரமும் ஆகையினுல்
ஆட்டுரமும் மாட்டுரமும் வயல்உரங்காண் ஆண்டே
வயல்முழுது முள்ளவாய் மடைமுழுதும் உடையவள்
செயல்முழுதுங் கொண்டுநான் சீரிடுவேன் ஆண்டே
சீரிடுவேன் கண்ணுடையாள் செந்நெற்குடி வயல்முதலாய்
ஏரிடுமுன் உரமேத்த இனிவருவேன் ஆண்டே
வருவேன்என் றுரைத்தபடி மகிழ்ந்தாட்டுப் பட்டிகொண்டு
குருவார நாள்கண்ணக் குடும்பனும்வந் தானே. (76)

தண்ணமிர்தம் கண்ணுடைய தாயார் கிராமம்எல்லாம்
நண்ணுவயல் ஆடுவைக்க நாட்கொண்டு தான்குடும்பக்
கண்ணனெதிர் சொன்னநயம் கண்டிடையர் சேரவந்தார்
கண்ணியம்சேர் ஆட்டுக் கிடையும்வந்து சேர்ந்ததுவே. (77)

கதிக்குங் கோவில்குடி யான பேய்வெட்டி
காளைக் கோனும் கனதொகை ஆடும்
குதிக்கும் சேரிளங் குட்டியும் குட்டிக்
குடாப்பு டன்கிளைக் காலுந்தான் கொண்டு
துதிக்கி ணங்கிய கண்ணுடை யாள்வயல்
சூழ்ந்த பண்ணைத் தொழில்எச மானி
வதிக்கவே ஆட்டுப் பட்டிகொண் டிப்போது
வந்தார்கள் கோன்கள் வந்தார்காண் ஆண்டே. (78)

பச்சை மாமயில் கண்ணுடை யாட்குப்
பரம்ப ரம்வரும் பண்ணைக்கி ராமம்
மெச்சு செந்நெற் குடியிலுப் பைக்குடி
மீத முள்ள வயல்நிலம் எல்லாம்
நிச்ச யம்செய் திடையார் வகுப்பில்
நித்தம் நூறு கிடையா டமைத்தே
இச்சை யாய்இரு பத்தொரு நாள்வயல்
எல்லாம் நான்உரம் ஏற்றினேன் ஆணடே. (79)

### பஞ்சாங்க ஐயங்கார் வருதல்

இப்படியே பண்ணைவயல் எல்லாம் உரமேற்றிச்
செப்பமிகு கண்ணுடைய தேவிபண்ணைக் கேற்றதொரு
கப்பலென வந்தபண்ணைக் காரன் மகிழ்ந்திருக்க
அப்போது பஞ்சாங்க ஐயங்கார் வந்தாரே. (80)

### ஐயங்கார் நாள் இடுதல்

தேவ மந்திரி வியாழ பகவான்
திராணி உள்ள திருப்பதி ஐயன்
நாவ லர்துதி மிஞ்சிய கண்ணுள்ள
நாயகி வயல் நாள்ஏ ரிடவே
மேவும் வெள்ளிநற் பஞ்சமி மூலம்
மிதுன லக்கின வேளைநல் வேளை
ஏவும் என்னக் குடும்பனைப் பண்ணையார்
இன்று நாள்ஏர் இடென்றுசொன் னாரே. (81)

### பண்ணைக்காரர் நிலங்களின் பேரைச் சொல்லுதல்

சீரு கந்தவள் கண்ணுடை யாட்குத்
திருவி ளைநிலம் செந்நெற் குடியில்
சாரு கின்ற பெரியசெய் பள்ளச்செய்
சம்பாச் செய்யுடன் வானங்க மேடும்
காரு லாவும் இலுப்பைக் குடியில்
கருப்புக் காலும் வரகம்செய் சம்பாச்செய்
ஏரு ழும்நிலம் ஏகமும் நாற்றங்கால்
எங்கும் நாளேர் இடென்றுசொன் னாரே. (82)

### ஏரிட்ட பிறகு பள்ளர் வந்து கூறுதல்

அச்சுதனர் தங்கையென்னை ஆளவந்த கண்ணுடையாள்
வச்ரமணி போல் விளைவு வாய்த்தவயல் உள்ளதெல்லாம்
உச்சிதமாய் நாளேரிட்டு உள்ளபண்ணைப் பள்ளர் அங்கே
மெச்சுபண்ணைக் காரனுக்கு மீண்டுவந்து சொல்வாரே. (83)

வரைமாது கண்ணுடைய தேவி — பெரும்பண்ணை
வயலில்நா ளேரிடவே மேவி
விரைவாக நாங்கள் செல்லும் போது — தனித்தனியே
மெய்நிமித்தம் கண்டதுபொய் யாது
இரைதேர் கருடன் காடை இடமும் — அங்கே
இரட்டைப் பார்ப்பாரும்பாற் குடமும்
நிரையாக வந்ததுகாண் ஏரே — நல்ல
நிரைவிளைச்சல் விளையும்நயி னரே (84)

மன்னிளைப்பள் ளுள்ளதெல்லாம் கூட்டி — ரெண்டூர்க்கும்
வயலுக்கும் நூருய் ஏர்பரந்து பூட்டி
முன்னமுன்னே திசைநோக்கித் தொழுது — பண்ணை
முதற்கரைபிற் கரைமுழுதும் உழுது
நன்னயமாய் வரப்புவெட்டி இருத்திக் — குளமிதித்து
நாலுழ விற்பரம்படித்துத் திருத்திச்
சொன்னபடி கேட்கவென்று மீண்டோம் — இதுசமயம்
தொழில்களெலாம் சமைந்ததுகாண் ஆண்டே. (85)

## விதை விதைத்தல்

கத்தனிவன் என்றுபண்ணைக் காரன்வகை சொன்னபடி
கொத்தடிமைப் பள்ளரெல்லாம் கோவில்வயல் அத்தனையும்
உத்தமிகண் ணுத்தாள் உலகமெலாம் தன்கருணை
வித்துவிதைத் தாற்போல் விரைவிதைத்து வந்தாரே. (86)

## முளை வளர்தல்

திணைக்கும் குறவர் மணைக்கும் தொழிலாய்த் திரியும் பிள்ளையைப்
பெற்றவள்
செல்வக் கண்ணுள்ள நாச்சி யார்புகழ் திருவிழாக்களி யாட்டத்தில்
முனைக்கண் டுடனே அவித்த நெல்முளை முளைக்க வைத்தசீ மாட்டிக்கு
மூன்றுங் கொம்பி நணைத்த விரைநெல் முளைப்பது மெத்த
அருமையோ?
நணைக்கும் விரையத் தணையும் குடும்பன் நாற்றங் காலில் விரைத்தபின்
நறுந்தண்ணீர்விட்டுப் பருவம் செய்திட
நல்லநாச்சியார் கண்ணம்மன்
தணைக்கண் குளிரப் பூசிக் கும்சிவ சைவரும் பார சைவரும்
சார்ந்த கிளையும் வளர்ந்தால் போல்வயல் சேர்ந்த
முளைகள் வளர்ந்ததே (87)

அக்கணிந்தவர் உடன்ந டம்புரி முக்கண் அம்பிகை என்னவே
அடையா ளத்திரு வடிவு கொண்டகண் ணுடையா
ஊத்தொழும் அன்பர்க்குப்
பக்கு வம்பெரும் வடிவும் வயது மக்க ளுங்கிளை வர்க்கமும்
பாலும் பண்ணையும் ஏரும் சீரும் பசுவும் வளர்ந்து வருதல்போல்
திக்கி னில்உள்ள சிட்டுக் காடைகள் தக்க மணிப்புரு தன்னுடன்
சேரும் சிறகின் மாடப் புருக்கவு தாரி தன்னுடன் கூடியே
கொக்கி னம்முதல் குருகி னம்வந்து புக்கி டந்தெரி யாமலே
குளந்தண் ணீர்குளிர் தாமரை போல விளங்கு நாற்று
வளர்ந்ததே (88)

## பள்ளியர் நாற்றுநடச் செல்லுதல்

சொல்லருமைக் கண்ணுடையாள் துய்யமலர்த் தாள்பணிந்து
வல்லபண்ணை ஆண்டை மகிழ்ந்துரைத்த சொற்படியே
எல்லாரும் பட்சேரி எங்குமுள்ள பள்ளியர்கள்
நல்லதினம் தன்னில்வயல் நாற்றுநடச் சென்றூரே (89)

## நாற்று நடுகை

மிகுந்த நகரக் குடிக்கும் ஊர்க்கும் மேவு புவிக்கும் காவலாய்
மேல்மு கந்தனில் வடக்கு முகமாய் வீற்றி ருந்துதன் ஊரிலே
பகர்ந்த தோடம் காய்ச்சல் கருப்புப் பஞ்சம் படைவ ராமலே
பக்கத் துணைநின் றடைக்க லம்காக்கும் பாதுகாப்பிச்சி ஆனவள்
முகுந்த னுக்கிளை யவள்கண் ணுடையாள் மகிழ்ந்தி டும்பண்ணை
வயலுளே
முளைத்த நாற்றை வளைத்துப் பறித்து முடிகட் டிக்குடும் பேற்றவே
வகுந்து முதலைப் பகுந்து வயலில் புகுந்து மிகவும் நடுகைக்கு
வண்ணப் பள்ளிகள் வந்தார் கள்கனப் பண்ணைப் பள்ளிகள்
காணுமே. (90)

சீதள மலர்க் கண்ணு டையவள் பாத தாமரை போற்றியே
செந்நெற் குடியும் இலுப்பைக் குடியும் சிறந்து பள்ளிகள்
நிறைந்துதான்
ஆத ரவுடன் வெய்யி லுகந்த ஐயனர் கொட்டூர் உடையவர்
ஆத னம்அழ கைய னர்க்கும் அதிக பூசை நடத்தியே

போதை மகிழ்ந்து கண்ணக் குடும்பன் புள்ளிப் பள்ளரும்
கூட்டிப்போய்
பொருந்து கள்ளுடன் சாரா யப்படை திருந்து குடந்தொட்
டருந்தியே
மாதி ரம்தரு நாற்று முடியை வைத்து வணங்கி வானுள்ளே
மடவா ருங்கண்டு மகிழ வேநாற்று நடவாரும் வாரும்
பள்ளீரே. (91)

விரும்பு காணையில் வாள்மேல் நடந்தாள் வீறும் பாகைப்புல்
வாயம்மன்
விளைப னங்குடிப் பெரிய நாயகி வெற்றி யூரணி அம்மனும்
அரும்பொ ருளுரு வாட்டிப் பெரியாள் அடுத்த மங்கலம்
தன்னில்வாழ்
அரிய வள்இவள் ஆறு பெண்ணுக்கும் பெரியவள் அன்பர்க்
குரியவள்
பெரும்பு வியெலாம் பெற்றவள் என்னைப் பெற்ற தாய்கண்
ணுடையவள்
பேரில் பள்ளிசை பாடி யேபண்ணை ஊரில் பள்ளிகள் எல்லோரும்
குரும்பை அசையக் கரும்பு கனியக் குரவை முழக்கி விளையாடி
கோவில் நாற்று நடுகைக் கேகனி வாயில் வாழ்த்தும்
பள்ளீரே. (92)

நகரக் குலதெய்வம் கண்ணு டைய நாச்சி யார்க்குப் பரம்பரம்
நடக்கும் தேவ தாய முழுதும் நன்னுட் டுவரி பலவரி
சகல வரியும் பருவ ரிமெத்தத் தலத்து வரியும் தள்ளியே
சருவ மானிய உம்பள மாகச் சாம்ராஜ் யப்பட் டயந்தந்தோன்
மகரா சன்முத்து வடுக நாதேந்த்ரன் வளர்ச மஸ்தானம் தழைக்கவே
மதிமந் ரியான தாண்டவ ராயன் மார்க்கண் டனைப்போல்
இருக்கவும்
செகமெல் லாம்வளர்ந்திடவும் தேவியைத் திக்கு நோக்கிமுன்
கும்பிட்டு
திரைத்த செந்நெல் நடவா ரும்வாரும் உரத்த பண்ணைப்
பள்ளீரே (93)

சினத்தை வென்றவர் தமக்கோர் அடிமை செகத்து ளோர்க்கொரு
பொதுப்பிள்ளை

செந்த மிழ்முத்து நாய கம்பர தேவ தைதுணை என்னவே
நினைத்தி ருக்குமைந்தெழுத்தி னுலது தனக்கி ருப்பிடம் என்னவே
நெஞ்சின் மேல்வைத்த கல்லும் கரடும் பஞ்சின் மேல்வைத்த
பூவென

கனத்தி டாதுவந் துதவி யருளின் மனத்தி டமயங் காமலே
கருணை மருந்தால் நெஞ்ச டைப்பையும் கைவ லியையும்
தீர்த்தவள்

புனத்தி ளங்கிள்ளை கயற்கண் ணுடையாள் தனைத்தி னந்திசை
நோக்கியே

போற்றி செய்தவள் புதுமை யைச்சொல்லி நாற்று நடுங்காண்
பள்ளீரே (94)

அன்னப் பெண்பிள்ளை அழகு சொரியச் சொர்ணப் பெண்பிள்ளை
பாண்டியன்

அருமைப் பெண்பிள்ளை கண்ணு டையவள் பெருமைக்
கிசைந்த பண்ணையாம்

செந்நெற் குடியில் மறக்குப் பான்செய்யில் சேர்ந்த கோயில்
வாசல்செய்

திருவி யார்செய்யும் அரச டிச்செய்யும் சிறுசம்பா நாற்று
நடச்செய்தே

பொன்னைக் கண்டது போல குடும்பன் தன்னைக்கண்டொரு
பண்ணையான்

பூராயத்துடன் வரையிலேயவன் சாரா யக்குடி வெறியிலே
சன்னக்கும்பிடு போல வேயொரு சின்னக் கும்பிடு போட்டதுமவன்
சாய்ப்பை யும்பள்ளன் ஏய்ப்பை யும்தொழில் வாய்ப்பையும்
பாரும் பள்ளீரே (95)

ஆதி ரைத்திரு நாள்உ ளோர்க்கொரு சோதி ரத்னமாய் வந்தவள்
அன்ன பூரணி கண்ணு டையவள் ஆளும் செந்நெல் குடிதனில்
மாதி ரத்துடன் அழகன் வயக்கல் மாவ டிச்செய் கல்லஞ்செய்
வாய்ந்த கண்ணுடை யாள்வயக்கலும் வானங்க மேடும்
நடச்செய்தே

பாதி ரிப்பூவைப் பறித்துப் பரவிச் சாதிரைக்குளே மறைத்திட அந்தப்
பள்ளன் கையிலே தாவென் ருன்அவள் உள்ளங் கையிலே
பூவென்ருள்
ஏதி ருக்குது சொல்லென் ருன்அவள் மோதி ரக்கையால்
நில்லென்ருள்
இதத்தையும்வெகு விதத்தையும்களி மதத்தையும்பாரும்
பள்ளீரே (96)

வரிச்சி ருக்கமுன் கூரை வெந்திட மணக்கி எப்பம்வ ராமலே
மகிமை செய்துநல் வரம்செய் கண்ணுள மகமா யிபுகழ் வளர்ந்திட
விரிச்ச நெட்டிலே கதலி கமுக விளங்கும் செந்நெல் குடிதனில்
வெட்டுச் செய்யுடன் பிள்ளை வயக்கல் பொட்டச் செய்யிலும்
நடச்செய்த
நரிச்சி என்கிற மூத்த வள்பள்ளப் பெரிச்சி உண்கிற சோற்றிலே
நண்டா ணத்தைவிட் டுட்டி ஞன்அவள் சொண்டா னில்கள்ளை
மூட்டிஞள்
சிரிச்சுக் கொண்டவன் சிறுபள் ளிஎலி பொறிச்சுக் கொண்டந்தக்
கறியெலாம்
தின்று தந்திட மென்று தின்கிற சிங்கா ரம்பாரும் பள்ளீரே. (97)

அருந்த வப்பொருள் கருணைக் கண்ணுடை அம்ம ஊனத்தினம் பூசிக்கும்
அருமை நம்பியான் வீர பட்டனுக்கு அர்ச்சனை பாகம் பலதனை
திருந்து பிச்சுடை யான்செய் நல்லியர் செய்வி ளாவடிச் செய்யுடன்
சீறி செய்நல்ல கோப்பன் செய்பெருந் திருவி யார்செய்யும்
நடச்செய்தே
குருந்த னிற்கையில் உச்சி யேபள்ளப் பெருந்த னுக்குள்ள மெச்சியைக்
கூப்பிட் டகுரல் கேட்ட தேயவள் காப்பிட் டகையால் காட்டவே
மருந்த னப்படி நின்று வளரப் பெருந்த னப்படி என்றதும்
மச்சா னும்பய லொச்சா னும் செயும் முச்சா யம்பாரும் பள்ளீரே
(98)

வடக ரைப்புலி சசிவர் ணமுத்து வடுக நாத துரைசிங்கம்
மாநி லந்தரும் துரைக்கு வேண்டிய மைந்த னைத்தரு மகமாயி
கடக ளிற்றினை முருக னைத்தரும் கண்ணு டையவள் வயலுளே
கருப்புக் காலிடை தாரை காத்தான் காலங் கரைச்செய்
நடச்செய்தே

மடவா ஊைத்திரள் நடைப டித்திட வரும்செந் நெற்குடிப் பள்ளியும்
மலர்பொற் கொடிசேர் இலுப்பைக் குடியில் வாய்த்த பள்ளியும்
நேர்த்தியாய்
புடவை கட்டிநல் லுடைமை இட்டதைப் பேச்சி லேசெய்யும்
வருக்கமுந்தன
பெருக்க முங்கிளை நெருக்க மும்பள்ளன் உருக்க மும்பாரும்
பள்ளீரே (99)

அரம்பை யர்க்கணங் கரசி கண்ணுடை அம்மனுக்குள சொம் மெனும்
அதிகப் பொருள்சேர் இலுப்பைக் குடியில் அரண்ம ஊைதனில்
கட்டளை
பரம்ப ரம்வரும் முத்து நாயகம் தினம்பெ றுந்தன தும்பளம்
பதிங்க லவிரைப் பறவி லும் நல்ல பண்ணை நாற்று நடச்செய்தே
வரம்ப ருகிலே பள்ளி யைக்கண்டு பரம்பொ ருபுறம் தள்ளியே
வள்ளக் கையிலே கால்வைத் தான்அந்தப் பள்ளப் பயலை
மேல்வைத்தான்
பிரம்பா னழகி வலுக்கி ருளவள் பேத்தி யும்முலை துலக்கி ருள்மெத்த
பிலுக்கி ருள்வளை கிலுக்கி ருள்முத்துக் குலுக்கி ருள்பாரும்
பள்ளீரே. (100)

மதிக்கும் பனசைப் பதிக்கும் புவிக்கும் மதிக்கும் பொருள்கண்
ணுடையவள்
மன்னி னபொருள் இலுப்பைக் குடியில் மகிழும் நாட்டுக்
கணக்குடன்
துதிக்கும் அம்பலந் தலத்துக் காவல் சுயம்பா கம்வயி ராவிகள்
தோப்புப் பண்டார தலத்தார் நிலத்தில் வாய்ப்புக் கண்டுமுன்
நடச்செய்தே
பதிக்கும் நாற்றை மிதிக்கும் சேற்றில் பரப்பும் பள்ளிகள் நடுவிலே
பக்கப் பார்வை அடக்கிக் கடைக்கண் பத்தி யாயந்தக்
கொண்டையைக்
குதிக்கும் கெண்டையி தென்ன வேவயல் குருகி னங்கண் டுண்ணவே
குடும்பன் கச்சால்கொண் டரிக்கிருன் அந்தக் கோமளம் பாரும்
பள்ளீரே. (101)

வள்ளிக் கொடிநன் கருணைக் கண்ணுள்ள மகமா யிபுகழ் வளர்ந்திட
வாய்த்த பண்ணையில் குடியான மேகம் காத்தவ ராயன் உழவுதான்
சொல்லில் பெரிய சாணுன் குளத்தில் துதிசெ யும்கண பதிசெய்யும்
துலங்கு கண்ணுடை யாள்வ யக்கலும் சூழ்ந்த நிலங்கள்
நடச்செய்தே
நெல்லிக் காய்முலைச் செல்லிக் காய்ப்பள்ளன் அல்லிக் காய்பறித்
தெறிந்ததும் அதை
நெடும்பிச் சிகண்டு பறித்த தும்அதைக் குடும்பிச் சிகண்டு
மறித்ததும்
சல்லிப் பேச்சிலே சொல்லிக் கேட்கிருன் நல்லிக்குச் சொன்ன
சாரமும் விப
கார மும்உப கார மும் பச்ச பார மும் பாரும் பள்ளீரே. (102)

கொட்டி வைத்திடு திரவி யம்போல் செட்டி மக்களை வளர்ப்பவள்
குவளைக் கண்ணுடை யவளைப் பணிந்து குலவும் சாக்கூர்
வயலுள்ளே
நட்டி ஊத்துவி டாதி ருத்தலும் நாச்சி யார்செய் வாட்டச்செய்
நாயங் குடியில் பொத்தக் கண்ணன்செய் நாலு பொருளும்
நடச்செய்தே
கட்டி கட்டியாய் விளைந்து டைந்திடும் கனிப லாச்சுளை இனிப்பிலே
கலிச்சி யும்சின்னப் பிலுச்சி யும்அந்தக் களப்பம் செய்திளங்
குரும்பைமேல்
எட்டி எட்டிமுன் எறிந்த சேற்றை இருளக் குடும்பன் துடைக்கப்போய்
எலுமிச் சம்பழ மதுக்கி ருனந்த வலுமிச் சம்பாரும் பள்ளீரே.
(103)

தளத்தில் வருமண்டலிகர் கெப்புலி தாண்டவ ராய தளசிங்கம்
சலுகைக் காரி உலகை வளர்த்த சமர்த்தி கண்ணுள்ள நாச்சியார்
குளத்தி வயலில் அழகன் வயக்கல் கூறும் நாச்சியார் செய்யுடன்
கொத்துக் கணக்கன் சிறுகு ளந்தனில் குண்டச் சன்தனை
நடச்செய் தே
வளத்து டன்வரும் பெருமை யைக்கண்டு மனம்சகி யாமல் பொருமியே
வலிய வந்துவி ளாத்தக் குடியில் மடைதி றந்துநல் லுவச்சன் செய்
முளைத்தண் ணீர்விட்டு முனியக் குடும்பன் இளைத்து வாராளனென்
றேச்சல்லோ
மோரைக் கேட்கி ருப் போலே ரெண்டிள நீரைக் கேட்கிருன்
பள்ளீரே. (104)

படைக்கும் புவனப் பரப்பும் நிரப்பும் பகிரண் டமும்பெற் றெடுத்தவள்
பனசைப் பதிநற் கண்ணு டையவள் மனதுக் கிசைந்த வயலுள்ளே
இடைக்கி டைபெறும் வடகொ ருக்கையில் ஏகாலிச்செய்
செய்க்கெல்லாம்
ஈடு கட்டிய நாச்சி யார்செய்யும் காடு வெட்டியும் நடச்செய்தே
உடைக்கும் வாய்மடை அடைக்கும் குடும்பன் உழவு பண்ணை
வயலுள்ளே
உச்சிதப் பள்ளிகள் நடுகைச் சிந்துகள் ஒருமித் தின்பமாய்ப்
படிக்கையில்
அடைக்கி நாத்தினுள் கடைக்கண் ணேட்டத்தில் ஆட்புள் ளிமெள்ளப்
பார்க்கிருள்
அதுக்கல் லோகண்ணக் குடும்பன் நிற்கிருன் ஒதுக்கி லேபாரும்
பள்ளீரே. (105)

வாரைப் புணையும் தனத்தி னுள் எழு பாரைப் புணையும் கனத்தினுள்
வடக்கு வாய்ச்செல்லி கண்ணு டையவள் மகிழும் பண்ணை
வயலுள்ளே
நாரைக் குலம்சேர் சூரைக் குளத்தில் நாச்சி யார்செய் தன்னுடன்
நாவி தன்தனை புல்ல னூர்வயல் நாலு பொருளும் நடச்செய்தே
சீரைப் புகழ்ந்து படிக்கையில்பள்ளன் சிறுபெண் கள்கும்மி
யடிக்கையில்
செட்டிக் குளத்து அழகன் வயக்கல் சேர்ந்த பிள்ளையார்
தனையுமாய்க்
கோரைக் கிழங்கு களையெ டுக்கிற குமரிப் பள்ளிகள் நெளிப்பையும்
மஞ்சட்
குளிப்பை யுமனக் களிப்பை யும்பரி மளிப்பை யும்பாரும்
பள்ளீரே. (106)

## நாற்று வேரூன்றுதல்

மாற்றதிக மானதங்க மாநிதிகண் ணுள்ளவனைப்
போற்றிசெயும் அன்பர்புரி புண்ணியம் வேரூன்றுதல்போல்
நாற்றுநட எங்குமவர் நன்மனம்போ லேகரைத்த
சேற்றில்நட வேரூன்றிச் சேரவளர்ந் தோங்கியதே (107)

## களை எடுத்தல்

சிறுமைப் படாத வழியைத் தெரிந்தே அடிமைப் படவந் தவர்க்
கெல்லாம்
செல்வ மும்பர கதியும் வாழ்வும் செம்மைப்படுத்தி இம்மைக்கும்
மறுமைக் கும்துணை யாக வந்தவள் வடக்கு வாய்ச்செல்வி
பண்ணைக்குள்
வயலி னில்களை தழைய வேபெண்கள் மதிமு கக்களை விளையவே
நறுமைக் குவளை களைப ரப்பியே நாலு திக்குள செய்க்கெலாம்
நல்ல நாச்சியார் கண்ணுடையவள் நளின மலர்த்தாள் நம்பினோர்
வெறுமைக் கலியைப் பிறவிக் கடலை வினைத்துன் பங்களைப் பிணிகளை
வேரு டன்களை எடுத்தாற் போல்களை தூருடன்எடுத்
தார்களே (108)

நதிய ணிந்தவர் உடன்ந டம்புரி நாச்சி யார்அருள் வேண்டியே
நாட்ட மும்களி யாட்டமும்பொருள் ஈட்ட முங்கொடுப் பவருக்குக்
கதித ரும்திருச் சந்நி திதனில் எதிர்தரும் திரு நீறெனும்
கற்பந் தரித்த நாள்முதல் வந்து கெற்பந் தரித்துக் கிளைக்கெலாம்
நிதித ரும்பொருள் விளைந்தி டமனை நிறைந்த மக்களைப் பெறுதல்போல்
நெடிய சாலிகள் கருக்கொண் டுகதிர் நீண்டு நித்தம்என்
அம்மனைத்
துதிசெ யும்புல வோர்கள் மனையில் அதிச யம்பெரும் செந்தமிழ்ச்
சொல்வி ளைந்தது போல வேவயல் நெல்வி ளைந்தது
காணுமே. (109)

## கதிர் அறுத்தல்

சீருடைய கண்ணுடையாள் தேவிதிருத் தாள்போற்றிக்
காருகந்த பண்ணைக் கதிர்அரிய வேண்டுமென்று
பாருகந்த பள்ளரெல்லாம் பண்ணையான் சொற்படியே
நீருகந்த பூங்கழனி நிறையவந்து கூடினரே (110)

கரிய மாலயன் இமைய வர்புகழ் கண்ணுடையவள் வயலுள்ளே
கனபள் ளருடன் பள்ளிகள் வந்து கதிர்அ ரிந்துபின் கட்டியே
வரிசை யானகட் டெடுத்துக் களத்தில் மலைகள் போல போர்வைத்து
மகிழ்ந்து கொத்தரில் இலவு குறித்து மறுநாட் கழித்துச்
சூடெல்லாம

பரிவு சேர்சிவ பக்தியில்லாமல் திரியும் மானிட மிருகமாய்ப்
பருங்கி டாக்கள்போல் கருங்கி டாக்களைப் பலபிணையலாய்ப்
பூட்டியே
பெரிய சூடுகள் நூறுநூ ருய்ப்பிரித்து அடித்து எடுத்தவைக் கோலையும்
பின்பு தள்ளியே நெடும்பொ லிகளைக் கும்பு செய்தனர்
குடும்பரே (111)

நாலு திக்கிலும் குவித்த பொலிவை நன்ரு கப்பொலி பொலியென்றே
நடந்து பள்ளர்கள் தூற்ற வேமலர் மடந்தை கண்ணுடை
யவளெனும்
வாலை சுந்தரி பதம்வ ணங்காத மக்கள் பதராய்ப் பிறந்திடும்
மனிதப் பதர்கள் என்னக் கலந்து மணிநீர்ப் பதரை நீக்கியே
கோலா கலமாய் அளந்து நாச்சியார் குறுணி ஐயனுர் குறுணியும்
கொத்துப் பிடிகள் பெருங்கங் காணம் குளவெட்டுப்பல சுவந்திரம்
சோலி யுள்ளது மணிபம் கணக்குச் சொன்ன கங்காண முன்னுக்குத்
துகையிட் டளந்தார் பண்ணை நெல்லெலாம் வகையிட் டளந்தார்
குடும்பரே. (112)

உலகில் மிக்ககண் ணுடைய வள்திரு உண்மை மகிழும் பள்ளிசை
உரைத்த தமிழ்க்குத் திருக்கை விளக்கம் உம்ப ளம்நிலம் சம்பளம்
நலமி குந்திரு நாட்கட் டளைகள் நடக்கும் வரிசை நடக்கவே
ராச கரத்தார் நகர மூவர் நாலு காரண வகுப்புள்ளோர்
பலச னங்களும் தரும் பொன் பூஷணம் பணங்கள் கடுக்கன் மோதிரம்
பட்டுபட் டாங்கு சாதி ரைத்தலைப் பாகு துப்பட்டி பாற்பசு
விலைஉ யர்ந்தநெல் நவம ணிகன வெகுமதி வந்து குவிந்தாற்போல்
விளைந்த நெற்பொலி குவிந்தி டப்பொலி அளந்த நெற்பொலி
குவிந்ததே. (113)

மாதாவாங் கண்ணுடைய மாமயிலைப் போற்றிவயல்
ஆதாய மும்செலவும் அம்பார நெல்வகையும்
காதாரக் கேட்கமுகங் கண்டுபண்ணைக் காரனிடம்
நீதான்உரை யெனவே நின்று பள்ளன்சொல்வானே. (114)

செந்நெற் குடியில் பெரிய செய்வ குப்பில் வைகாசி மாசத்துத்
திருநாட் கட்டளைக் கிருநூற் றுக்கலம் ஒருநாட் போலளந்தேன்.
சொன்ன செலவுக் கின்னம் வேணுமென் றேநூற்றுக் கலநெல்
சொரி குரும்பையும் நரியிரங்கலும் வரியனுக்களந்தேன். (115)

இருப்புக் கால்கொண்டு கருப்புக் கால்விளை நெல் உச்சிக்காலத்துக்கு
எழுநூற் றுக்கலம் ஈர்க்குச்சம் பாநெல் முழுமூச் சாயளந்தேன்.
திருப்பணி வேலைக் கருப்புக்கட்டி விலைவீ ராண்டிவயல்
சிறுமணி தனில் மறுவில் லாநெல்லும் குருவையும்
அளந்தேன். (116)

குணதிசைக்கரை அணையடைத்திட வும்நடுக்குளங்கடைக்
கொம்புக்கும் செந்நெற்குடிக் கண் மாய்க்கும் நம்பிக்கையாகப்
பணவிலைப்படி மணவாரிப் பொலியில் நூற்றுக் கலநெல்
பட்டர் பங்குடன் குளவெட்டுக் கூலி ஒட்டருக் களந்தேன் (117)

கெம்பீரத்துடன் அம்பாரக் கிடையில் இலுப்பைக் குடிக்கும்
கீழக்கண்மாய்க்கும் கிணறு வெட்டுக்கும் வாழைத் தோப்புக்கும்
சொம்பாகம்விளை சம்பாச் செய்ப்பொலியில் கூலிப் பள்ளுக்கும்
தொண்ணூற் றுக்கலம் துய்ய மல்லிநெல் எண்ணிக்
கொண்டளந்தேன் (118)

அருமைத்தாயார் மேல் பெருமைப்பள்ளுரைத்த புலவருக்குநான்
ஆற்றித் தூற்றி நூற்றுக் கலநெல் சோற்றினுக் களந்தேன்.
குருவுக்கென்றுபின் இருபத்தைங்கலநெல் அடிமை தனதில்
கொண்டுபோய் வைத்துக் கணடுவணங்கிக் கும்பிட்டுக்
கொடுத்தேன். (119)

வெண்பிறைத்திரு வேணிநாரணியாம் கண்ணுடையவள்
மிக்கபண்ணைக்கு வேண்டியவிரை வர்க்கமுளதெல்லாம்
பண்புடன்வகைக் கெண்பது கோட்டை விரையாக விரைப்
பட்டடைபதி னுலிலும்விரை கட்டினேன் ஆண்டே (120)

அம்மனுக்குள்ள சொம்மிலுப்பைக் குடிக் கோவிற் கெம்பரை
ஆறின்மூ வாயிர நூறுகட்டுக்கிடை அதிலும் உண்டாண்டே.
நம்மிடகள்ளன் பேய்ப்புலிவாசல் பெரிய கெம்பரை
நாலிலும் இரண் டாயிரக்கலம் மேலும் உண்டாண்டே. (121)

## மூத்தபள்ளி பண்ணைக்காரனிடம் வந்து குறை கூறுதல்

பொன்மகள்கண் ணுத்தாள் புகழ்பண்ணை நெல்விவரம்
நன்மையுள்ள பண்ணை நயினுர்க்குச் சொல்லிப்பின்
தன்மனது கூர்ந்து தனித்திருக்கும் போதுபள்ளன்
வன்மமெல்லாம் மூத்தபள்ளி வந்துசொல்லக் கண்டானே. (122)

சொந்தடி யாள்வந்து கும்பிடு றேன்பண்ணை ஆண்டே—பள்ளன்
சூதறி யீரென்று சொல்லவல் லோவந்தேன் ஆண்டே
கொந்தளம் இட்டல்லோ நண்டு பிடிப்பதேன் ஆண்டே—உங்கள்
கொத்தடி மைசெய்யும் கொடுமையைக் கேளுங்கள் ஆண்டே
(123)

முந்தின பள்ளி — நானென்று
சொந்தமும் தள்ளி — இளையவள்
முகமுரி யாமல் — களப்பெறுந்
தொகைபிரி யாமல்
வந்ததை ஒதுக்கி — அவளுக்கு
விந்தையைப் புதுக்கி — மேய்ச்சால்
மதினியை மேய்ப்பான் — பனங்கள்ளைப்
பதினியென் றேய்ப்பான்
சந்தமாம் பாட்டுக்—கேட்கநான்
முந்தானை போட்டுக்—கொண்டே
சஞ்சல மாறேன்—அவள்செய்த(து)
என்சொலப் போறேன்?
நிந்தனை தொடுப்பான்—என்னைக்கண்டால்
தெந்தனம் எடுப்பான்—அவனுக்கு
நீரினிச் சொல்லும்—உமைப்போல்
யாரினி ஆண்டே. (124)

## இளையபள்ளி வருகை

சோதிமணிக் கண்ணுடையாள் சொல்வளமைப் பண்ணையெனும்
ஆதிமுத லானபண்ணை ஆண்டவர்க்குத் தூண்டிவெகு
சேதிசொல்ல வேண்டுமென்று சென்றுநின்ற மூத்தபள்ளி
பாதிசொல்லு முன்இளைய பள்ளிதுள்ளி வந்தாளே. (125)

## பள்ளிகள் ஒருவரை ஒருவர் ஏசுதலும் அம்மையை வாழ்த்தி அமைதி அடைதலும்

குண்டணி பரைந்ததென்ன மூத்தபள்ளி? — தினம்
கொள்ளையிடக் கிடையாட்டால் கோபமென்னடி.
உண்டான காரியந்தான் இளைய பள்ளி — உனக்கு
உள்ளதுசொன் னல்மனதில் உளுக்குதோடி.

எனக்கேன் உளுக்குமடி மூத்தபள்ளி — உன்போல்
இழுக்குள்ள பள்ளிக்கல்லோ உளுக்குமடி.
சினத்துநான் சொன்னபடி இளையபள்ளி — உன்னைச்
செலுத்தாமல் விட்டால்வர்மம் தீராதடி

தீராத கோபமென்ன மூத்தபள்ளி — கொல்லத்
தெருவிலே ஊசிவிற்கச் செல்லுமோபோடி
பூராயக் காரிநீதான் இளையபள்ளி — முழுப்
பூசணிக் காய்ம் சோற்றில் புதைப்பாய்டி.

புதைப்பாய் பணமிருந்தால் மூத்தபள்ளி சும்மா
புழுதிப் பிரட்டி லேவாய் போக்கா தேபோடி
பதைப்பெல்லாம் நானறிவேன் இளையபள்ளி — சின்னப்
பள்ளியென்றால் நயினார்க்குப் பட்சமல்லோடி.

பட்சமுண்டு சொல்லுண் டானல் மூத்தபள்ளி — நல்ல
பாலும் பதக்குமோரும் பதக்கோடி
தெட்சணைவைத் தாரிடத்தில் இளையபள்ளி — இந்தத்
தெந்தினவித் தைபடித்தாய் சிறுக்கி போடி.

சிறுக்கிதான் உன்னைப்போல மூத்தபள்ளி - இன்னம்
சிகிற்பண்ணி முகம்காட்டித் திரிகிறேனேடி.
இறுக்கி உறுக்கிவாராய் இளையபள்ளி — எங்கள்
ஏழூர்ப்பத்தில் ஓரூர் இருப்பதடி.

இருப்பதுவும் சித்தூரென்ருல் மூத்தபள்ளி—பள்ளன்
எனைக்கண்டா ஆசைகொள்வான் இனிச்சொல்லடி
உருக்கம் அறிவேனடி இளையபள்ளி—உனக்கு
உச்சாயமெல் லாம்சர்க்கரைக் கச்சாயமடி

ஆடுவாய் பாடுவாய்நீதான் இளையபள்ளி—உன்சொல்
ஆர்க்குமிச்சம் ஆனல் ஊர்க்கும் ஏற்குமோபோடி
ஏற்குமென்று தானல்லவோ மூத்தபள்ளி—இப்போ
ஈக்கும் நாய்க்கும் தடையில்லை என்கிருயடி

சேர்க்கையாய்ப் பணமும்நெல்லும் இளையபள்ளி—வந்து
சிக்கினல் உனக்குடம்பு தெரியாதோபோடி
தெரியும் இனித்திராணி மூத்தபள்ளி—சற்றே
தீண்டிநான் பார்க்கிறேன்உன் சீத்துவமடி

நரியெதிர்த்தால் சிங்கமல்லோ இளையபள்ளி—உன்னை
நடுவீட்டில் நட்டுவைத்தேன் நானல்லோடி
நானறிவேன் அந்தச்சேதி மூத்தபள்ளி—நீதான்
நட்டுவைத்தாய் பண்ணைச்செய்யில் நாற்றையல்லோடி

பண்ணைப்பள்ளன் கொள்ளவந்த இளையபள்ளி—முறை
பார்க்கநான் பெரியகுடிப் பள்ளியல்லோடி
பெண்ணைக் கேடாய்ப் பேசுகிருய் மூத்தபள்ளி—உந்தன்
பேரும்செந்நெல் குடிப்பள்ளி பிசகென்னடி

பெரியதனம் பேசுகிருய் இளையபள்ளி—உந்தன்
பேரிலுப்பைக் குடிப்பள்ளி பிசகென்னடி
பரிவாய் இரண்டுகுடி இளையபள்ளி—கோயில்
பண்ணைக் குடும்பனுக்குப் பலித்ததோடி

பலித்ததற்குத் தாட்சியென்ன மூத்தபள்ளி—சும்மா
பணத்துக்கோ வந்தேனிந்தப் பள்ளனுக்கடி
மெலித்துப்பே சலுமாச்சே இளையபள்ளி—இன்னம்
வீரிசொல்வாய் நீகனக் காரியல்லோடி

கனக்காரி என்கிருயே மூத்தபள்ளி—துரை
கட்டளைசெய் யூர்ப்பள்ளி கனமல்லோடி
மணைக்கேருள்ள காலந்தொட் டிளையபள்ளி—பண்ணை
வந்தநாளில் வந்தவள்நான் வலுவல்லோடி

அல்லவடி கூறுகெட்ட மூத்தபள்ளி—எந்தன்
ஆசைப்பள் ளனுக்குநீதான் ஆரடிபோடி
சொல்லச்சொல்ல மிஞ்சுகிருய் இளையபள்ளி—மிகத்
துள்ளும் எருதுபொதி சுமக்குமடி

சுமக்கும் எடுத்துவிட்டால் மூத்தபள்ளி—வெறும்
தோதகமா டாதேவண்டத் தோப்பாடிபோடி
இமைக்கும் கண்ணுக்கும்வேருே இளையபள்ளி—உனக்கு
என்னைப்போலே தாய்தமக்கை இல்லை யோபோடி

உன்னைப்பார்க்கப் பின்னையார்சொல் மூத்தபள்ளி—இருது
ஊதிச் செடிநுழைய வொண்ணுதடி
பொன்னைப்பல கூறிட்டாலும் இளையபள்ளி—கூடப்
போட்டுருக்கும் போதிலொன்ருய்ப் பொருந்துமடி

பொருந்தாமல் போவதுண்டோ மூத்தபள்ளி—என்னைப்
பூஷணமாய் வைத்தாலுன்னைப் போற்றுவேனடி
விருந்துப சாரமல்ல இளையபள்ளி—இது
வேளைப் பிசகால்வந்த வீண்பேச்சடி

பேசிலென்ன ஏசிலென்ன மூத்தபள்ளி — களப்
பேறெல்லாம் உனக்கு வாங்கித் தாரேனடி.
ஆசைதீர வேணுமடி இளையபள்ளி — பள்ளன்
அந்தரங்கம் நீயல்லவோ அறிவாயடி.

நீயும் சொன்னாய் நானும் சொன்னேன் மூத்தபள்ளி — நம்ம
நீதி மார்க்கந் தப்பவொண்ணா தடிகேளாய்
தாயும் பிள்ளையும் போல இருபேரும் — வாழி
தான்மகிழ்ந்து பாடிநன்றாய் இருக்கவாடி.

## வாழ்த்து

வாழிவாழி கண்ணுடையாள் பாதம்வாழி — முத்து
வடுகநா தேந்த்ரமக ராசன் வாழி.
வாழிபுவி நாடுநகர் மிக வாழி — தமிழ்
வாழிமறை வாழிதினம் வாழிதானே. (126)



